# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
2.3.2008 ரூ.8.00
80 பக்கங்கள்







## பினாமி பாடலாசிரியர்கள்?

- கோடம்பாக்க ட்ராமா!



"காங்கிரஸ் காட்டும் அன்பு!"




குஜராத்தில் கல்கி
ஏன்?
எதற்கு?
எப்படி?
எப்போது?
ஒரு க்ளோஸ் - அப் படப்பிடிப்பு
கூடுதல்
விவரங்கள்
அடுத்த வாரம்...

வழக்கமாக தமாஷ் நாடகங்களைப் போட்டு, 'காதுல பூ' சுற்றும் எஸ்.வி.சேகர், தமது சீரியஸான செயல்பாடுகள் மூலம், அ.இ.அ.தி.மு.க. வினரைக் கலக்கியிருக்கிறார். அம்மாவின் நேரடித் தொடர்பில் கட்சியில் இணைந்து சட்டமன்ற உறுப்பினரானவர். இதன் காரணமாக, சேகருக்கு சசிகலாவைச் சந்தித்து மரியாதை செய்யும் அவசியம் இல்லாமல் போய்விட்டது. வந்தது பிரச்னை. கடந்த ஒரு வருடமாகவே சேகர் திட்டமிட்டு புறக்கணிக்கப்பட்டு வருகிறார். அவர் அனுப்பும் ஃபாக்ஸ் கடிதங்கள் அம்மாவுக்கு அனுப்பப்படுவதில்லை. முக்கிய பிரமுகர்கள் முதல் உள்ளூர், வட்டச் செயலாளர் வரை எல்லோரும் ஒதுக்கவே, தவித்துப்போனார். இந்த நிலையில் சமீபத்தில் நடந்த பொதுக்குழுவில் கலந்துகொள்ள, சேகருக்கு அழைப்பிதழ் அனுப்பப்படவில்லை. பொதுக்குழு அரும்பாக்கத்தில் நடந்துகொண்டிருந்தபோது, சேகர் கோட்டைக்கு விரைந்தார். அவர் ராஜினாமா கடிதம் கொடுக்கப்போவதாகச் செய்தி பரவியது. அதிர்ந்து போனது அ.தி.மு.க. வட்டாரம். கடைசியில் ஜெ.வின் உதவியாளர் தொடர்புகொள்ள, பொதுக்குழு நடந்த இடத்துக்குச் சென்று அம்மாவைச் சந்தித்தார். ''கடந்த பல மாதங்களாக சேகர் அனுப்பிய கடிதங்களின் நகல்களை மீண்டும் கேட்டிருக்கிறார் அம்மா'' என்கிறார் சேகரின் நண்பர். பிரச்னை

# "அண்ணா தி.மு.க. அல்ல ...

முடிவுக்கு வந்துவிட்ட நிலையில், மகிழ்ச்சியாக இருந்த சேகரைச் சந்தித்தோம்.

**உண்மையிலேயே அன்று எதற்காக கோட்டைக்குப் போனீர்கள்?**

''காருக்கு ஃபேன்ஸி நம்பர் வாங்கப் போனதாகச் சில பத்திரிகைகளில் எழுதியிருக்கிறார்கள். அது சரியான தகவல் அல்ல. நான் புதிய கார் வாங்கியிருக்கிறேன். அரசுப் போக்குவரத்து துறையில் அரசு வாகனங்களுக்குப் பயன்படுத்துவதற்காக, சில கார் எண்களைத் தனியாக ஒதுக்கி வைத்திருப்பார்கள். அந்த எண்களில் ஒன்றை, தனி நபர் ஒருவருக்கு ரிலீஸ் செய்ய வேண்டுமென்றால், அதை அரசுதான் செய்ய வேண்டும். அப்படிப்பட்ட ஒரு நம்பரை என் காருக்கு வாங்கவே, அன்று நான் சட்டமன்றச் செயலாளரைப் பார்க்கப் போனேன். அதற்குள் இஷ்டத்துக்குக் கதை கட்டி விட்டார்கள்.''



**உங்களுக்கு அ.தி.மு.க.வில் என்ன பிரச்னை?**

''மீடியாவிடம் அதை டிஸ்கஸ் செய்ய வேண்டிய அவசியம் எனக்குக் கிடையாது.



# அம்மா தி.மு.க..!”

## – எஸ்.வி.சேகர் விளக்கம்

சொல்ல வேண்டியதை அம்மாவிடம் சொல்லி விட்டேன். நான் ராஜினாமா செய்தால், வோட்டுப் போட்ட மக்களுக்குச் செய்த துரோகமாக இருப்பது மட்டுமல்லாமல், எனக்கு ஸீட்டு கொடுத்த கட்சித் தலைமையையும் அவமதித்தது போல ஆகிவிடும். மேலும், ஒரு கோடி உறுப்பினர்கள் உள்ள அ.தி.மு.க.வில் நான் நீடிப்பதும், நீடிக்காததும் அம்மாவின் நம்பிக்கையைப் பொறுத்த விஷயம். என்னைப் பொறுத்த வரை, அண்ணா தி.மு.க. அல்ல; அம்மா தி.மு.க.தான். நான் கட்சியில் சேர்ந்த முதல் நாள் எந்த அளவுக்கு உண்மையாக, அம்மாவின் மீது முழு நம்பிக்கையோடு இருந்தேனோ, அதே அளவுக்கு அர்ப்பணிப்போடும், விசுவாசத்தோடும் இருக்கிறேன்; என்றும் இருப்பேன்.''

– ப்ரியன்




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்கஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
எக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**2225 1522, 2225 0623, 2225 1324**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



# என்சான்டட்

**வா**ல்ட் டிஸ்னி நிறுவனத்திலிருந்து வெளிவந்திருக்கும் சிண்ட்ரெல்லா வகைக் கதைதான். ஆனால், மிக முக்கியமான ஒரு வித்தியாசம். அனிமேஷன் உத்தியில் பேசும் காமிக்ஸ் பாத்திரங்கள், கொஞ்ச நேரத்தில் நிஜ மனிதர்களாக மாறுகின்றன.

காமிக்ஸ் உலகில் வாழும் இளவரசிக்கும், அடுத்த நாட்டு இளவரசனுக்கும் காதல் உண்டாகிறது. இது பொறுக்காத சூனியக்காரக் கிழவி, ஒரு பெரிய கிணற்றுக்குள் அவளைத் தள்ளிவிடுகிறாள். கிணற்றுக்குள்ளே மணிக்கணக்கில் செல்லும் இளவரசி, அங்குள்ள கதவைத் (மேன்ஹோல்!) திறந்துகொண்டு வெளியே விழுவது அமெரிக்க நகரத்தில்!

நியூயார்க்கின் பழக்கவழக்கங்கள் அவளுக்குக் கொஞ்சமும் புரியவில்லை. ''என் இளவரசனை நான் எப்படிக் கண்டுபிடிக்க?'' என்று அவள் கேட்கும் கேள்விக்குப் பதில் சொல்ல யாருக்கும் நேரமில்லை. மனைவியிடமிருந்து விவாகரத்துப் பெற்று, தன் குட்டி மகளோடு வாழும் இளம் வழக்கறிஞர் ஒருவர், அவள் மீது பரிதாபப்பட்டு, ஒரு நாள் மட்டும் அவளைத் தங்களோடு தங்க அனுமதிக்கிறார். அவளது அப்பாவித்தனத்தால் கவரப்பட்டு, இளவரசனைத் தேட முயற்சி செய்கிறார். போகப்போக அவரது உண்மையான ஆதரவு, இளவரசியின் மனத்தில் சலனத்தை ஏற்படுத்துகிறது. காமிக் பாத்திரமாக இருந்தபோது இளவரசனிடம் ஏற்பட்ட காதல், நிஜ உலகில் ஆட்டம் காண்கிறது. இதற்கு நடுவே சூனியக்காரி பாத்திரம், அமெரிக்காவுக்கு வந்து இளவரசிக்கு விஷ ஆப்பிளைத் தந்துவிட, கிட்டத்தட்ட உயிர் இழந்த அவளுக்கு வழக்கறிஞர் உயிர் கொடுக்கிறார். இதற்குள் அமெரிக்காவுக்கு வந்து சேரும் இளவரசர் பாத்திரமும் தன் காதலைத் தியாகம் செய்கிறது. சுபம்!

நாம் எதிர்பார்க்கிற திசையிலேயே இம்மி பிசகாமல் நகர்கிற கதைதான் என்ற போதிலும், பாராட்ட விஷயங்கள் உண்டு. முக்கியமாக, இசை. நான்கு பாட்டுகளுமே மிக இனிமை. இவற்றில் மூன்று, ஆஸ்காரின் இறுதிச் சுற்றை எட்டியவை. மற்றொன்று படமெங்கும் விரவிக் கிடக்கும் நகைச்சுவை. முக்கிய பாத்திரங்களை ஏற்கும் நடிகர்கள் எல்லோருமே, கச்சிதமாகத் தங்கள் பங்கைச் செய்திருக்கிறார்கள்.

**குழந்தைகளுக்கான படம் என்ற போதிலும் பெரியவர்களுக்குள் ஒளிந்திருக்கும் குழந்தை ஏக்கங்களுக்கு அழகான வடிகால் விருந்து என்சான்டட்!**

**- ஜி.எஸ்.எஸ்.**



★ தொடங்கட்டும் இயக்கம்!

# "இந்தியத் தலைவர்கள்

● கே.வி.ராமன், சென்னை - 73

? ஒரிஸ்ஸா மாநில காவல் நிலையம் ஒன்றில், நக்ஸலைட்கள் நுழைந்து பதினைந்து பேரைக் கொன்று, வெடி மருந்துகளை எடுத்துச்சென்றுள்ளனர். தர்மபுரி காவல் நிலையம் ஒன்றிலும், ஆயுதங்கள் களவாடப்பட்டு பின்னர் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன... இது குறித்து...?

! பாதுகாப்பு நிலையத்திலேயே பாதுகாப்புக் குறைவாக இருக்கும் அவலம் ஒருபுறம் இருக்க, உளவுத்துறை தரும் தகவல்களை அலட்சியம் செய்வதும் வாடிக்கையாகி வருகிறது. இந்த இரண்டையும் சீர் செய்தால் மட்டும் போதாது; நக்ஸலைட்டுகள், மாவோ இயக்கத்தினர் அதிகரித்து வருவதற்கான மூல காரணங்களையும் கண்டறிந்து நீக்க வேண்டும்.

● சம்பத், வேலாயுதம்பாளையம் ☐

? 'இந்த நூற்றாண்டில் புகை பிடிப்பதால் மட்டுமே, நூறு கோடி மக்கள் இறந்து போவார்கள்' என்று உலக சுகாதார அமைப்பு எச்சரித்துள்ளதே?

! "என்னுடைய (கலை தொடர்பான) கருத்துச் சுதந்திரத்தில் யாரும் தலையிடுவதை நான் விரும்பவில்லை!" என்று அன்புமணிக்குப் பதிலளித்த ஷாருக்கான், இதைப் படித்தாவது 'ஷாக்' அடைந்து மனம் மாற வேண்டும். இளைஞர்கள், திரைப்பட நட்சத்திரங்களைத் தங்களுக்கு முன் மாதிரியாகக் கருதுவது உலகில் மிக

● எம்.பாஸ்கர், திண்டுக்கல் ★

? அறுபது சதவிகிதம் மக்கள் ஈடுபட்டு வரும் விவசாயத்துக்குக் கிடைக்காத முன்னுரிமை, வெறும் இரண்டு சதவிகிதத்தினர் ஈடுபாடு கொண்டுள்ள பங்குச் சந்தைக்குக் கிடைப்பது ஏன்?

! பங்குச் சந்தை, உட்கார்ந்த இடத்தில் இன்று முதலீடு செய்து, நாளைக்கே லாபம் அறுவடை செய்யக்கூடிய துறை. (கிட்டத்தட்ட சூதாட்டம் போலத்தான்). விவசாயம் அப்படி இல்லையே! நெற்றி வியர்வை சொட்டச் சொட்ட உழைக்கணுமே!

## நீங்கள் கேட்டவை

அதிகம். இதை peer pressure என்பர்.

● சி.மகேஷ், திருச்சி

? சம்பள உயர்வு கேட்டு, கூடுதலாய் ஒரு மணி நேரம் வேலை செய்த, கான்பூர் மருத்துவக் கல்லூரி டாக்டர்களின் போராட்டம் பத்தி..?

! மகிழ்ச்சி தரும் முன்னுதாரணப் போராட்ட முறை.

● என்.காளிதாஸ், சிதம்பரம்

? ஆடம்பரம் வேண்டாம் என்று ஜெயலலிதா கூறியுள்ளாரே?

! கலைஞர் கூடத்தான், 'விளம்பரம் வேண்டாம்; வெறுப்பு வளரும்' என்கிறார். விருந்திலே ஒருவர், 'இரண்டாம் தடவையா பாயாசம் பரிமாறாதீங்க; வயிறு ரொம்ப ஃபுல்' என்று சொன்னால் என்ன அர்த்தமோ, அதுதான் இவர்கள் பேச்சுகளுக்கும் உட்பொருள்.

● சி.என்.ரமாதேவி, சின்னவேடம்பட்டி

? 'விஜயகாந்துக்கு 20 லட்சம் டன் சிமெண்ட்டுக்கும், 20 மூட்டை சிமெண்ட்டுக்கும் வேறுபாடு தெரியவில்லை' என்று முதல்வர் சொல்லியிருக்கிறாரே? சினிமாவில் புள்ளிவிவரம் அடுக்குபவரா கோட்டை விட்டிருப்பார்?

! கோட்டை விடாவிட்டாலும் கொட்டாவி விட்டது நிச்சயம். சினிமாவில் பேசும் வசனங்கள் எல்லாம் கற்பனை. அரசியலில் சரியான புள்ளிவிவரங்களோடு பேச வேண்டும் என்பதை, அரசியல்வாதி விஜயகாந்த் உணர வேண்டும்.

● பா. அச்சுதன், வயலூர்

? 'ஆபாசம், வன்முறை இல்லாத திரைப்படங்களுக்குப் பொதுமக்கள் ஆதரவளிக்க வேண்டும்' என்று நடிகர் சேரன் தெரிவித்துள்ளாரே?

! போதாதுங்க; ஆபாசம், வன்முறை தாங்கி வரும் படங்களுக்கு ஆதரவு மறுக்கவும் வேண்டும்.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை - 1

? 'சமத்துவ மக்கள் கட்சி'யில் அனைவருமே தலைவர்கள்தான் என்

# "திமிர் பிடித்தவர்கள் என்கிறாரே அத்வானி?"

* கொட்டாவி தடுமாற்றம்!



* வேண்டாம் பாயாசம்!



* ஆபத்து சமத்துவம்!



## தராசு

***கிறாரே சரத்குமார்?***

! அனைவருமே தொண்டர்கள்தான்னு சொல்லியிருந்தா, அது அர்த்தமுள்ள சமத்துவமா இருந்திருக்கும். அனைவரும் தலைவர்கள் என்பது அபத்தமான - ஆபத்தான சமத்துவம். தலைக்குத் தலை நாட்டாமையில் முடியக்கூடும்.

● **சி.கார்த்திகேயன், விருதுநகர்**

***? கிட்னி திருடுவது, கிட்னி விற்பது - எது இப்பொழுது நடக்கிறது?***

! கிட்னி விற்க முன்வரும் ஏழைகளிடம், சட்ட விரோதமாக கிட்னியைப் பெறுவதுகூடத் திருடுவதற்கு ஒப்பானதுதான். நிற்க. இப்போது ஒரு புதிய மோசடி ஆரம்பமாகியிருக்கிறது - இதயக் கோளாறுக்காக 'ஸ்டென்ட்' என்ற செயற்கை உபகரணம் பொருத்த வேண்டும் என்று, நோயாளிகளை ஏமாற்றி நடத்தப்படும் ஆபரேஷன்கள்! இதில் ஸ்டென்ட் உற்பத்தி நிறுவனத்திடமிருந்து கார், பங்களா போன்ற கமிஷன் பொருட்கள், டாக்டர்களுக்குக் கிடைக்கின்றன! ஹார்ட்லெஸ் டாக்டர்கள்!

● **கே.ஏ.காளிமுத்து, காரை - ராஜீப் பேட்டை**

***? 'வோட்டுக்காக யார் பணம் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ளுங்கள்; ஆனால், வோட்டை மட்டும் தே.மு.தி.க.வுக்குப் போடுங்கள்' என்கிறாரே விஜயகாந்த்?***

! லஞ்சம் வாங்குவது கொடுமை; எதற்காக லஞ்சம் பெறப்பட்டதோ, அதைச் செய்து தராமலிருப்பது அதனினும் கொடுமை. விஜயகாந்த் கூறியிருப்பது அதிகாரிகளிடம் மட்டுமின்றி, மக்களிடமும் இரட்டைக் கொடுமையை வளர்க்கின்ற கேவலமான வழிகாட்டல்.



● அடிக்கும் 'ஷாக்!'

★ ஆதாய ஆசை!



● **வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி**

***? 'ஆன்மிகமும் பகுத்தறிவு இயக்கமும் ஒன்றோடு ஒன்று மோதாமல், சமுதாயப் பணி செய்ய வேண்டும்' என்கிறாரே கருணாநிதி?***

! மோதாமல், சீண்டாமல் இருந்தால் சமுதாயப் பணி மட்டுமல்ல; அரசுப் பணிகூட அமைதியாக நடக்கும் என்று நாம் கருணாநிதிக்குச் சொல்லிக்கொள்கிறோம்.

● **எம்.சிவகுருநாதன், தஞ்சை**

***? 'இந்தியாவிலுள்ள பெரும்பாலான அரசியல் தலைவர்கள் திமிர் பிடித்தவர்களாக உள்ளனர். இதர நாடுகளை ஒப்பிடும்போது, இந்தியாவில் உள்ள அரசியல் தலைவர்களுக்கு மிகுந்த அதிகாரமும் செல்வாக்கும் இருப்பதாலேயே, அவர்கள் அப்படி இருக்கிறார்கள்' என்கிறாரே அத்வானி?***

! வீட்டுக்குள் இருப்பவர்தான் அதைச் சரியாகச் சுத்தம் செய்ய முடியும். அத்வானியே ஒரு தூய்மை இயக்கத்தை ஆரம்பித்து வைக்கலாம். சின்ன திருத்தம், 'அதிகாரமும் செல்வாக்கும் இருப்பதால்' என்பதை **'அதிகாரமும் செல்வாக்கும் இருப்பதாக அவர்கள் நினைத்துக் கொள்வதால்'** என்று நாம் திருத்தி வாசிக்க வேண்டும். இங்கே அப்படியொன்றும் பிரமாத அதிகாரமில்லை; அதிகார துஷ்பிரயோகம்தான் இருக்கிறது. அதற்குக் காரணம், அத்வானியே குறிப்பிட்ட திமிர்தான். ●

❐ ரூ.100 பரிசு பெறுபவர் : **சம்பத், வேலாயுதம்பாளையம்**

★ ரூ.50 பரிசு பெறுபவர் : **எம்.பாஸ்கர், திண்டுக்கல்**

**சமீப காலமாக தமிழக அரசியல், விஜயகாந்தை மையமாக வைத்து, சுழல ஆரம்பித்திருக்கிறது. மனிதர் என்ன பேசினாலும், தி.மு.க. - அ.தி.மு.க. இரண்டு தரப்பிலும் பற்றிக்கொள்கிறது. இந்தப் பரபரப்பான சூழலில் கேள்வி களோடு சந்தித்தோம்...**

**'எந்தப் பிரச்னையென்றாலும் சந்து முனையில் பேசாமல், சட்டமன்றத்தில் வந்து பேசட்டும்' என்று தி.மு.க. சொல் கிறதே?**

''நான், என்னால் முடிந்த அளவு மக்கள் பிரச்னைகளை, சட்டமன்றத்தில் பேசிக் கொண்டுதான் இருக்கிறேன். ஆனால், சமீ பத்தில் எனக்குப் பேச வாய்ப்பு கொடுத்த அன்று, என் கட்சிக்காரர் இறந்துவிட்டதால் விருத்தாசலம் போக வேண்டியதாகிவிட் டது. அப்படியும் சபாநாயகருக்கு முறைப் படி தகவல் சொல்லியிருக்கிறேன். என்னை, சட்டமன்றத்தில் வந்து பேசச் சொல்லும் இவர்கள், 1991-96 மற்றும் 2001-2006 கால கட்டங்களில் என்ன செய்தார்கள்? சட்ட மன்றத்துக்குச் சென்று, கையெழுத்து மட்டும் போட்டுவிட்டு வந்தவர்தானே ராகப் பார்த்து, பல கோரிக்கைகளைச் சொல்லிவிட்டு வந்தேன். ஆனால், காரியம் ஒன்றுமே நடக்கவில்லை. திருமண விழாக் களிலும், சந்து முனைகளிலும், அரசை விமர்சிக்கிறேன் என்கிறார். திராவிட இயக்கம் வளர்ந்தது சந்துமுனைக் கூட் டங்களிலும், திருமண விழாக்களிலும் தானே. என்னை மட்டும் ஏன் குறை சொல் கிறார்? இவர்கள் கோபாலபுரத்துச் சந்து முனையில் கூட்டம் கூட்டிப் பேசிய தில்லையா?''

**உங்களுக்கு அடக்கம் தேவை என் கிறாரே கருணாநிதி?**

''நான் அடக்கத்தோடுதான் பேசு கிறேன். ஒவ்வொரு கட்சித் தலைவரும், தொண்டர்களின் நம்பிக்கை வளரும் வகை யில்தான் பேசுவார்கள். அந்த அடிப்படை யில், நான் பாராளுமன்றத் தேர்தலில் நாற் பது இடங்களிலும் வெற்றி பெறுவோம் என்று பேசினேன். கலைஞர் நாளை நமதே; நாற்பதும் நமதே என்று பேசிய தில்லையா? அது ஆணவமா, அடக்கமா? நாமெல்லோரும் மதிக்கும் லால்பகதூர்

# காங்கிரஸ்

கலைஞர். ஜனநாயகக் கடமை ஆற்ற வேண்டுமென்று அப்போது அவருக்குத் தோன்றவில்லையா! ஒவ்வொரு அமைச்ச



சாஸ்த்ரியை, 'குள்ளர் சாஸ்த்ரி குழப்பத் துக்கு மேஸ்த்ரி' என்று கலைஞர் பேசி னாரே! அது ஆணவமா, அடக்கமா? அனந்தநாயகி சட்டமன்றத்தில் ஒரு கேள்வி கேட்டபோது, இவர் சொன்ன பதில் ஆபாசக் குப்பையல்லவா? மறைந்த நாஞ்சில் மனோகரனை, 'மந்திரக்கோல் மைனர்' என்று விமர்சித்தாரே! இப்படி கலைஞர் அடக்கமில்லாமல், ஆணவமாக வும் ஆபாசமாகவும் பேசியதை, நிறைய எடுத்துக்காட்ட என்னால் முடியும்.''

**கருணாநிதியை விமர்சிக்கும் அள வுக்கு ஜெயலலிதாவை ஏன் விமர்சிப்பதில்லை?**

''நாங்கள் வளர்ந்து கொண்டிருக்கும் கட்சி.



தனிப்பட்ட மனிதனுக்கோ அல்லது இயக்கத்துக்கோ சொந்தமானவர் அல்ல! சிறு வயது முதற்கொண்டே எம்.ஜி.ஆர். ரசிகன் நான். எம்.ஜி.ஆர்., கட்சி தொடங்கி திண்டுக்கல் தேர்தலில் மாயத் தேவர், அ.தி.மு.க. சார்பில் போட்டியிட்டபோது, அவருக்காக தேர்தல் பிரசாரம் செய்திருக்கிறேன். அப்போது இருந்த கலைஞரின் அரசு, அ.தி.மு.க.வின் பிரசாரத்தை முடக்கவும் தடுக்கவும், எப்படியெல்லாம் அதிகார துஷ்பிரயோகம் செய்தது என்றும் எனக்குத் தெரியும்.''

**உங்கள் கட்சியில் ஆயிரக்கணக்கான**

# காட்டும் அன்பு!

## - உற்சாகத்தில் விஜயகாந்த்

எனவே, ஆட்சியில் இருப்பவர்களைத்தான் அதிகம் விமர்சனம் செய்ய முடியும். தி.மு.க. - அ.தி.மு.க. ஆகிய இரு கட்சிகளும், இனி தமிழகத்தில் ஆட்சிப் பொறுப்புக்கு வரக்கூடாது என்றுதானே ஒவ்வொரு கூட்டத்திலும் பேசுகிறோம்.''

**எம்.ஜி.ஆர். படத்தை உங்கள் கட்சியினர் பயன்படுத்தியது ஏன்?**

''புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர்., மக்களின் ஏகோபித்த ஆதரவைப் பெற்று வாழ்ந்து மறைந்த தலைவர். அமரரான தலைவர்களின் நற்பண்புகளைப் போற்றிப் பாராட்டுவது தவறா? எம்.ஜி.ஆர்., எந்தத்

**வர்கள் இணைந்தாலும், பலர் வெளியேறிக் கொண்டிருப்பதாகவும் சொல்லப்படுகிறதே?**

''கட்சியில் எதையோ எதிர்பார்த்து திடீரென்று வந்தவன்தான், கட்சியைவிட்டு வெளியேறி ஓடுகிறான். விலகிப் போகும் நபர்களை நான் தடுக்கமுடியாது. ஆயிரக்கணக்கானவர்கள் இணையும்போது, விரல்விட்டு எண்ணக்கூடியவர்கள் போவதைப் பற்றி நான் சிறிதும் கவலைப்படவில்லை.''

**குடும்ப அரசியல் குறித்து நீங்கள் அவ்வளவாக விமர்சிப்பதில்லையே. உங்கள்**



தைப் பற்றி இதுவரை சிந்திக்க வில்லை. மக்கள் பிரச்னைகளைப் பற்றிப் பேசி, கட்சியைப் பலப் படுத்துவதே இப்போதைய நோக்கம்.''

**தி.மு.க. – அ.தி.மு.க. ஆகிய இரு கட்சிகளும் இனி தமிழகத்தில் ஆட்சிப் பொறுப்புக்கு வரக்கூடாது**

**மனைவியும் அவரது சகோதரரும், உங்கள் கட்சியில் முக்கியத்துவம் பெற்றிருப்பதால்தானா?**

''ஒருவர் கட்சி துவங்கும்போது, அவருக்கு உடனடியாக உதவி செய்பவர்கள், ஒத்துழைப்பு கொடுப்பவர்கள் அவர்களது குடும்பத்தினர்தான். கட்சி வளர்ச்சிக்கும், கட்சித் தலைவரின் செயல்பாடுகளுக்கும் அவர்கள் உதவியாக இருப்பதில் என்ன தவறு? எங்கள் இயக்க வளர்ச்சிக்காக தம் குடும்பப் பொறுப்புகளையும் துறந்து, என் மனைவி உழைக்கிறார். மற்றபடி கட்சி காரியங்களில் தலையிடுவது, முடிவெடுப்பது போன்றவற்றில் அவர்கள் ஈடுபடுவதில்லை. யாராக இருந்தாலும் மக்கள் ஏற்றுக்கொள்கிறார்களா என்பதுதான் முக்கியம். கலைஞர், அவரின் அத்தனை குடும்ப உறுப்பினர்களை வேண்டுமானாலும் முன்னிலை படுத்தலாம். இறுதியில், மக்கள் மன்றம்தான் அவர்கள் தகுதியைத் தீர்மானிக்கும்.''

**யாருடனும் கூட்டணி கிடையாது என்று மேடையில் பேசுகிறீர்கள். உங்கள் bargaining power-ஐ அதிகமாக்கிக்கொள்வதற்கான முன்னேற்பாடா இது?**

''தமிழ்நாட்டிலுள்ள எல்லா பெரிய கட்சிகளும், தனித்தனியாக தேர்தலில் நிற்க முடியுமா என்று பல முறை நான் சவால் விட்டிருக்கிறேன். யாரிடமிருந்தும் பதிலில்லை. மற்றபடி, கூட்டணி விஷயத்

**அப்படியென்றால் காங்கிரஸ் மேலிடப் பொறுப்பாளர் அருண்குமாருடன் கூட்டணி பற்றி விவாதித்ததாக வந்த செய்திகள்...?**

''மீடியா என்ன வேண்டுமானாலும் எழுதிக்கொள்ளட்டும். தமிழ்நாட்டு காங்கிரஸ் தலைவர்கள் அனைவரும் என்னிடம் மிக அன்பாகப் பழகுகிறார்கள். தேர்தலின்போது வகுக்கப்படும் யுத்திகள் பற்றி, இப்போதே பேசுவதில் ஒரு பயனும் இல்லை. அருண்குமாரிடம் நான் என்ன பேசினேன் என்பதை, காலப்போக்கில் காங்கிரஸ் தரப்பிலிருந்தே சொல்வார்கள்.''

**சமீபத்தில் முதல்வர், பேனர்கள், போஸ்டர்களில் தமது படத்தைப் போடுவதைக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்று சொன்னது வரவேற்கத்தக்கதுதானே?**

''ஒரு வருடத்துக்கு முன்னர் இதையேதான் சொன்னார். கறுப்புப் போர்வை போர்த்திக்கொண்டு, மக்கள் விமர்சிப்பதை நாம் காது கொடுத்துக் கேட்க வேண்டும் என்றார். இந்த ஒரு வருடத்தில் அவர் சொல்வதை யாரும் கேட்கவே இல்லை என்பதுதானே உண்மை நிலை. இது போன்ற அறிவிப்புகள் ஆத்மார்த்தமாகச் செய்யப்படுவதில்லை என்றே நான் கருதுகிறேன்.''

**– ப்ரியன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**



# கல்கி



2008 மார்ச் 2
சர்வஜித் மாசி 19
மலர் : 66
இதழ் : 31

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- *பாரதியார்*

## பாக். தேர்தல் முடிவுகள் உணர்த்தும் பாடம்!

**பா**கிஸ்தானிய மக்கள் முஷாரஃபுக்கு எதிரான தங்கள் வோட்டைத் தீர்மானமாகப் பதிவு செய்துள்ளார்கள். சட்டத்தைத் திருத்தி, அதன் மூலமாக சர்வ வல்லமை அடைந்து, அதிகாரத்தில் நீடிக்க முஷாரஃப் எடுத்துக்கொண்ட முயற்சிகள் விபரீத விளைவுகளையே இத்தேர்தலில் ஏற்படுத்தியுள்ளன! சர்வாதிகாரத்தை எந்தச் சமூகமும் ஆதரித்து வரவேற்காது என்பதே, இதன் மூலம் உலகின் அனைத்து தலைவர்களும் அறிய வேண்டிய பாடம்.

முஷாரஃப் ராஜினாமா செய்வதுதான் மரியாதையாக இருக்கும் என்றாலும், அவர் அவ்வாறு செய்ய மிகவும் தயங்குவார். அதிகாரத்தில் இருக்கும் வரையில்தான் அவரது உயிருக்கும் உடைமைகளுக்கும் பாதுகாப்பு. அதிகாரம் துறந்த மறுகணமே அவருக்கு எதிரான சட்டபூர்வமான வழக்குகள் தொடரப்பட்டு, விரைவில் அவர் பேரிலுள்ள குற்றச்சாட்டுகளுக்கு விசாரணை, கடுமையான தண்டனை என நடவடிக்கைகள் தொடரும். இதற்கு அஞ்சிதான் முஷாரஃப் இன்னமும் தன்னுடைய ராஜினாமாவை அறிவிக்காமல் இருக்கிறார்.

பேனசிரின் மரணத்தால், அவாது கட்சிக்கு ஆதரவாக அனுதாப அலை பெருகும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அந்த எதிர்பார்ப்பு ஓரளவுக்கே பூர்த்தியாகியிருக்கிறது. அக்கட்சி தனிப் பெரும்பான்மை பெறவில்லை. தற்போதைய நிலைமையைப் பார்க்கிறபோது, பேனசிர் புட்டோவின் பி.பி.பி. கட்சி ஆட்சி அமைக்கும் அளவுக்குப் பெரும்பான்மை பெறாவிட்டாலும்,




முன்னணியில் இருக்கிறது. நவாஸ் ஷரீஃப் கட்சியுடன் கூட்டணி அமைத்து, இக்கட்சி நல்லாட்சி நிறுவுவதற்கு முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். உதிரிகளை நாடக் கூடாது. முஷாரஃப் ஆதரவு கட்சி தூண்டில் போட்டாலும் அதில் சிக்கக் கூடாது.

விரைந்து ஆட்சி அமைத்து, பாகிஸ்தானில் அமைதியும் வளர்ச்சியும் வேரூன்ற வகை செய்யாவிட்டால் அங்கு அதிருப்தி பெருகும். சட்டம் ஒழுங்கு குலைந்து, மக்களின் அன்றாட வாழ்வு ரணகளமாகிப்போகும். ஏற்கெனவே பயங்கரவாதத்தின் பிடி அங்கே இறுகிக் கிடக்கிறது. பாக். மக்கள் நம்பிக்கை இழக்காமல் இருக்க வேண்டுமானால், பாகிஸ்தானில் மேலும் பயங்கரவாதம் பெருகாமலிருக்க வேண்டுமானால், நவாஸ் ஷரீஃப் - ஜர்தாரி ஆகிய இருவரும் கௌரவம் பாராமல் கை கோக்க வேண்டும். மிகக் கவனமாக, ராஜதந்திரத்துடன் செயல்பட்டு, முஷாரஃப்புக்குக் குறைந்தபட்ச தண்டனை மட்டுமே அளிப்பதாக உறுதி கூறி, அவரது ராஜினாமாவைப் பெறவேண்டும்.

அதன்பின் நல்லாட்சி அமைத்து, மக்களின் ஏகோபித்த நன்றியையும் ஆதரவையும் தட்டிக் கொள்ளலாம்.

மாறாக, முஷாரஃபை 'ஒரு வழி பண்ணிவிடுவதாக' தீர்மானித்துக்கொண்டு அறிக்கை வெளியிட்டுச் செயல்பட ஆரம்பித்தால், அவருடைய ஒத்துழைப்பு கிடைக்காது; அதிபராக இருந்தபடி குழப்பங்கள் ஏற்படுத்துவார். நிலைமை மேலும் மோசமடையும்.

இன்று பாகிஸ்தானில் எந்தக் கட்சி அதிகார பலம் மிக்கது என நிரூபிப்பதைக் காட்டிலும், இந்தத் தேசத்திலும் அமைதி நிலவும், ஜனநாயகம் செயல்படும், முன்னேற்றம் நிகழும் என்று நிரூபிப்பதுதான் மிக அவசியமாக இருக்கிறது.

வளர்ச்சிப் பாதையில் நாட்டைத் திருப்புவதற்கு, மறைமுக அமெரிக்க மேலாதிக்கத்திலிருந்து விடுபடுவது மிக அவசியம். நாட்டின் வளர்ச்சிக்கு அமெரிக்க உதவியைப் பெறுவது வேறு; ராணுவ பலத்தைப் பெருக்கிக்கொள்ள அமெரிக்க ஆதரவைப் பெற்று, அதன் கைப்பாவையாக மாறுவது வேறு.

பாகிஸ்தானில் புதிய ஜனநாயகம் மலரட்டும். அது மக்களுக்கு அடிப்படை சுதந்திரங்களையும் அண்டை நாடுகளுடன் நேச மனப்பான்மையையும் உறுதி செய்யட்டும். வளர்ச்சிக்கு இதுவே அடிப்படை. ●

## வட்டமேஜை

'**கா**தல் ஸ்பெஷல்' கல்கி இதழுக்கு, காதல் தொடர்பான பாசுரம் தந்த சுஜாதாவின் சமயோஜிதத்துக்கு சபாஷ்.

**தென்னூர், ம.ராஜேஸ்வரி**

**க**ல்கி எதற்கு 'காதல் சிறப்பிதழ்' வெளியிட வேண்டும் என்று நினைத்தேன். ஆனால், இதழைப் படித்த




பிறகுதான் என் எண்ணம் தவறு என்பதை உணர்ந்தேன்.

**கொடுமுடி, ந.சேதுராமன்**

**த**லையங்கம், தற்கால பிரச்னைகளுக்குத் தீர்வு காண உதவும் கருத்தோவியமாக இருந்தது.

**தஞ்சாவூர், இரா.பிரபாவதி**

'**நா**ன் நடிப்பவர்களின் திறமை கண்டு வியந்து போவேனே தவிர, அவர்களின் இமேஜைப் பார்த்து மலைப்பதில்லை' சபாஷ் கே.ராஜேஷ்வர்!

**வேலூர், கே.கஸ்தூரி**

**கா**ப்பியரசு காத்தமுத்துவின் ரீ மிக்ஸ் பாடல்கள் படுபிரமாதம். இனி காத்தமுத்து சினிமாவுக்குப் பாட்டெழுதலாம்!

**கடலூர், 'வானவில்' மூர்த்தி**

**சி**ந்தனையை அலையவிடும் மாணவ மணிகளுக்குச் சொல்லும் அறிவுரையாக அமைந்தது திருவாரூர் பாபுவின் சிறுகதை!

**ஸ்ரீரங்கம், இரா.வேதவல்லி**

'**செ**ன்னையில் தமிழ் செம்மொழி மையம் வந்தால்...?' என்ற கேள்விக்கு 'தராசு' அளித்த பதில், படா ஷோக்கா கீது நைனா.

**வேலூர் - 6, வே.ந.கதிர்வேல்**

**கி**ரேஸியின் ஜோக் சபா, ஜோக்கு வாதம், சிரிப்பினர் மற்றும் சிரிப்புப் பணி செய்த ஸோமாஸ், சின்ன அண்ணாமலை (70 முதல் 7 வரை) எல்லாம் படித்து, மனம் ஆனந்தத்தில் நிறைந்தது.

**விழுப்புரம், ஆர்.ராஜலட்சுமி**

**அ**ன்றும் இன்றும் என்றும் காந்திய வழியே நல்லவழி என்பதை எடுத்துக்காட்டிய 'எட்டாம் வகுப்பில் காதல் கடிதம்' அருமை.

**சென்னை, பி.ஆர்.ஸ்ரீனிவாஸன்**

### ஸ்பீட் போஸ்ட்

**தே**ர்தலுக்கு முன், தேர்தலுக்குப் பின், 'தோள்கொ(கெ)டுத்த' பிரிவினை சக்திகள் பற்றிய கார்ட்டூன் செம சூப்பர்.

**சென்னை - 61, வி.ஜி.சத்தியநாராயணன்**

**க**லைஞர் - சோனியா நட்பு பலமாக இருக்கும் வரையில், காங்கிரஸ், மற்ற கட்சித் தலைவர்களுடன் பேசுவதெல்லாம் வெறும் சம்பிரதாயமே...!

**அயன்புரம், த.சத்தியநாராயணன்**

எங்கள் வீட்டின் சிறிய தோட்டத்தில் சில மந்தாரைச் செடிகளும் செம்பருத்திச் செடிகளும் உண்டு. ஒரு பவழமல்லி கிட்டத்தட்ட மரமாகிவிட்டது. மந்தாரையில் இரண்டு வகை: 'கொக்கு மந்தாரை', 'கொழுக்கட்டை மந்தாரை' என்ற பெயர்களை விஜயா சொல்லித் தெரிந்துகொண்டேன். காலையில் சுவாமி படத்துக்குச் சாத்துவதற்காக பூ பறிக்கும் போதெல்லாம், எனக்கு அப்பா நினைவு வராமல் இராது. 'செடியில் இருக்கும் எல்லா பூக்களையும் பறித்துவிடக் கூடாது; நாலு பூ விட்டு வைக்க வேண்டும்' என்பார். 'கூடை நிறைய பறித்த புஷ்பங்கள் ஓர் அழகுதான் என்றாலும், செடியில் பூத்த நிலையில் பார்ப்பது தனி அழகு' என்று விளக்குவார்.

அவருடைய இந்த ரசனையில் எனக்கு உடன்பாடுதான். என்றாலும், பூ பறிக்கும் போது சிறிதும் தயங்காமல் செடியை மொட்டையடித்துவிடுவேன். 'பூப்பதே நாலு பூ; அதில் விட்டு வைப்பது எதற்கு? தெருவோடு போகிறவன் மதில் சுவருக்கு மேலாக எம்பிப் பறித்துக்கொண்டு போகவா?' என்று சமாதானம் சொல்லிக் கொள்வேன்.

பன்னீர் புஷ்பமும் பவழமல்லியும் 'கல்கி' அவர்களுக்கு ரொம்பப் பிடிக்கும். இரவில் பூத்து, அதிகாலையில் தரையில் உதிரும் பவழமல்லி, 'சக்ராயுதம் போல் சுழன்று இறங்குகிறது பார்!' என்பார்.

# 70 முதல் 7 வரை



காரில் எங்கேயாவது போகும்போது, வழியில் சரக் கொன்றை பூத்துக் குலுங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தால் உடனே, 'பொன்னார் மேனியனே...' என்று தம்முடைய கீச்சுக் குரலில் பாட ஆரம்பித்துவிடுவார்! வாசகர்களுக்கு **சேந்தன் அமுதன்** நினைவு வருகிறதா?

'கல்கி', சதாசிவம் இருவருக்குமே தோட்டக்கலையில் ஈடுபாடு மிகுதி. ஒரு வித்தியாசம். சதாசிவம் தோட்டத்துக்காக ஏகமாகச் செலவு செய்வார். 'கல்கி' நிதானம் காட்டுவார். மயிலாடுதுறையிலிருந்து எட்டு மைல் தூரத்தில், புத்தமங்கலம் என்ற

# ராஜாவுக்குக் 17

குக்கிராமத்தில் பிறந்து வளர்ந்த 'கல்கி' கிருஷ்ணமூர்த்திக்கு, விவசாயத்தில் நாட்டமிருந்ததில் வியப்பில்லை. சிறிது வசதியான வாழ்க்கை அமைந்தபோது ஊரில் நிலம் வாங்கி, தமது அண்ணா வேங்கடராமன், தம்பி ஜெகதீசன் ஆகியோர்

# காத்திருந்த ரோஜாக்கள்!




■ கல்கி அலுவலகத்தில் ரோஜாவின் நாயகன் நேருஜி உடன், சதாசிவம், எம்.எஸ். அவர்கள் மகள் ராதா, நேருஜிக்கும் எம்.எஸ்.ஸுக்கும் மத்தியில் சதாசிவத்தின் சகோதரி மகள் தங்கம்மாள்

பொறுப்பில் விட்டார். இதன்மூலம் வீட்டுக்குத் தேவையான அரிசியும் வந்து கொண்டிருந்தது; சகோதரர்களுக்கு உதவியதுபோலும் ஆயிற்று.

இத்துடன் அவர் நின்றிருந்தால் தேவலாம். மாம்பலம் போக் ரோடில் சொந்த வீட்டில் வசித்து வந்த 'கல்கி', காரியாலயத்துக்குப் பக்கத்திலேயே வீடு அமைந்தால் வசதி என்ற நோக்கில், டாக்டர் குருசாமி முதலியாருக்குச் சொந்தமான பல வீடுகளில் ஒன்றில் வாடகைக்குக் குடியேறினார். அப்போது போக் ரோடில் இருந்த மாளிகை போன்ற வீட்டை நாற்பதாயிரம் ரூபாய்க்கு விற்று, தாம்பரம் பக்கத்தில் பெருங்களத்தூரில் மாங்கன்றுகள் பயிராகியிருந்த, ஒரு பழப் பண்ணையை விலைக்கு வாங்கினார். இப்போதெல்லாம் week end resort, farm house என்றெல்லாம் சொல்லிக்கொண்டு பட்டணத்துப் பிரமுகர்கள் போகிறார்களே, அதை 1940களிலேயே செய்தவர் 'கல்கி'. சில ஏக்கர் விஸ்தீரணத்தில் இரண்டு பெரிய கிணறுகளையும் கொண்டிருந்த அந்தப் பழத் தோட்டத்தில், ஒரு சிறிய குடிலைத் தமக்கென்று அமைத்துக் கொண்டு சனி, ஞாயிறு கிழமைகளில் அங்கு போய் வரத் தொடங்கினார்.

அந்தச் சமயம், 'பகமை உரம் நல்லது; அதிலும் சணல் சாலச் சிறந்தது' என்று பிரசாரம் நடந்தது. அதை நிரூபிக்கக் கருதி,

விஸ்தாரமான நிலப்பரப்பில் சணல் பயிரிடச் செய்தார். 'கல்கி'க்குப் பிடித்த மாதிரி மஞ்சள் நிறப் பூக்களுடன் உரப் பயிர் செழித்து வளர்ந்தது. 'கல்கி' பண்ணை நடத்துகிறார் என்று தெரிய வந்ததும், அப்போதைய ஓமந்தூரார் மந்திரி

* ரோஜாவின் ராஜாஜியோடு கைகுலுக்கல்...



சபையில் இடம் பெற்றிருந்த உணவு அமைச்சர் மாதவமேனன், பண்ணையைப் பார்க்க வந்துவிட்டார். அவருக்கு விருந்துப சாரம் நடந்தது. மந்திரி வந்தாரேயொழிய மந்திரம் ஏதும் பலிக்கவில்லை. உரச் செடிக்கு உரச் செலவு, பயிர்ச் செலவு, பாசனச் செலவு, ஆட் கூலி, சம்பளம் என்று ஏறிக்கொண்டே போயிற்றே தவிர, மாங்கன்றுகளில் ஒரு பிஞ்சு விடவில்லை. 'அடுத்த வருஷம் பிரமாத மகசூல் இருக்கும்' என்று ஒவ்வொரு ஆண்டும் சொல்லிவர, நஷ்டக்கணக்கு ஏறிக் கொண்டே போயிற்று. நல்லவேளை, அக்கா ஆனந்திக்கு 1948ல் திருமணம் நிச்சயமாகவே, கல்யாணச் செலவு களுக்காக அந்த நிலத்தை விற்றுக் காசாக்கி விட்டார் அப்பா. அதில், திருமணத்துக்குப் பிறகு கையில் ஏதும் மிஞ்சவில்லை. அதனால் என்ன? கல்யாணம் கோலாகலமாக நடந்தது; பழப் பண்ணையும் மேற்கொண்டு கையைக் கடிக்காமல் விட்டது.

இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், பழப்பண்ணையை வாங்கிக்கொண்டவர் சதாசிவம்! அவரிடமே வளர்ந்து வந்த அவர் மருமான் ராமச்சந்திரன்தான் ஆனந்திக்குக் கணவராக வாய்த்தவர். ஆக, சம்பந்தியிடமே நிலம் விற்று, பணம் பெற்று, கல்யாணத்தை நடத்தியதாயிற்று!

சதாசிவம் தம் பங்குக்குப் பண்ணையை உற்சாகமாக நடத்த ஆரம்பித்தார். அவர் உற்சாகம் எந்த அளவுக்குப் போயிற்று என்றால், 'பியூக்' கார் டிக்கியில் எரு ஏற்றிக் கொண்டுபோய் பயிர்களுக்கு வைக்கும் அளவுக்கு! இன்று நாம் சாலைகளில் சர்வ சாதாரணமாகக் காணும் சொகுசு மாடல் கார்கள் போன்றது, அந்நாளைய 'பியூக்'. இந்த விஷயம் கேள்விப்பட்டதும், ''பியூக் காரில் எரு அடித்த விவசாயி, உலகிலேயே நீங்கள் ஒருவராகத்தான இருக்க முடியும்!'' என்று கிண்டலடித்தார் 'கல்கி'. ''அப்படி ஒரு கௌரவம் அளிக்கிறேனே என்பதற்காகவாவது அந்த மாமரங்கள் நாலு பழங்கள் தந்தால் சரி'' என்றார் சதாசிவம். ஆனால், அவை மறுத்துவிட்டன!

**ஏகாம்பரத்தை நேருஜிக்கு அறிமுகப்படுத்தி, ''என் தோட்டத்தை, அழகாகப் பராமரித்து வருபவர் இவர்தான்'' என்றார் சதாசிவம்.**

ஒரு சமயம் சதாசிவத்தின் இல்லத்தில் நடைபெற்ற ஒரு விருந்தின்போது, 'கல்கி' அவர்களுக்கு எதிரே ஔவை டி.கே. சண்முகம் அமர்ந்திருந்தார். அவர் இலையில் கத்திரிக்காய் பொரியல் உண்ணப்படாமல் இருப்பதைப் பார்த்து 'கல்கி', ''என்ன சண்முகம், கத்திரிக்காய் கறியை ஒதுக்கி

விடாதீர்கள்; சதாசிவத்தின் பண்ணைத் தோட்டத்திலேயே விளைந்தது; ஒவ்வொரு கத்திரிக்காயும் ஐந்து ரூபாய் அடக்க விலை!'' என்றார். அப்போது எழுந்த சிரிப்பலையில் சதாசிவத்தின் சிரிப்புதான் ஓங்கி ஒலித்தது. என்றாலும் நாளடைவில், சதாசிவமும் சலிப்படைந்து, ஒரு சினிமா நட்சத்திரத்தைப் பிடித்து, அவரிடம் பண்ணையை விற்றுவிட்டார்.

நேரடி மேற்பார்வையில் இல்லாத பழப்பண்ணை சரிப்பட்டு வரவில்லையே தவிர, கல்கி காரியாலயத் தோட்டத்தை அற்புதமான அழகுடன் அமைத்தார் சதாசிவம். விஸ்தாரமான புல்வெளிகள் உருவாக்க அவர் எடுத்துக்கொண்ட பிரயாசையே பிரமிக்க வைக்கும். கிட்டத்தட்ட மூன்றடி ஆழத்துக்கு நிலத்தைத் தோண்டிய தோட்டக்காரர்கள், மண்ணையெல்லாம் சலித்து, கோரைப் புல் முளைவிடக் கூடிய பூண்டுகளை நீக்கினார்கள். அப்புறம்தான் புல்வெளிக்கான பிரத்யேகமான புல் ஊன்றி, பசுமைப் பரப்பை உருவாக்கினார்கள். அவ்வப்போது lawn mover கருவி பயன்படுத்தி வந்ததால், பச்சை ஸாட்டின் விரித்தது போலிருக்கும். இத்தகைய புல்வெளியின் மையத்தில் ஒரு பர்ண சாலை; இப்பால் ராஜாஜிக்கு என்று தனியே ஒரு குடில் (இதைத் தமது 'நெ.10, டவுனிங் தெரு' என்று ராஜாஜி வேடிக்கையாகக் குறிப்பிடுவதுண்டு); காஸா சுப்பாராவ் வசிக்க ஒரு சின்ன இல்லம் எல்லாம் அந்த மிகப் பெரிய தோட்டத்தில் இருந்தன. மரநிழல் படியாத இடங்களில் பல்வேறு பெயர்களில் வண்ண வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கின. பல ரக ரோஜா மலர்கள், 'ரோஜாவின் ராஜா'வை வரவேற்கக் காத்திருந்தன!

நேருஜி ஒரு சமயம் தமது சென்னை விஜயத்தின்போது, நிஜமாகவே கல்கி காரியாலயத்துக்கு வந்துவிட்டார்! வாசலில் வரிசையாக நின்றிருந்த எங்களையெல்லாம் அறிமுகம் செய்கிறவிதமாக, இன்னின்னார் இந்திந்த இலாகாவைக் கவனித்துக்கொள்கிறார் என்று கூறிவந்த சதாசிவம், கடைசியில் தோட்டத்தைச் சுட்டிக்காட்டி, ''நான் தோட்டத்தைக் கவனித்துக்கொள்கிறேன்'' என்று முடித்தார், பெருமிதத்துடன். எங்கள் எல்லோரையுமே கவனித்துக்கொள்பவர் சதாசிவம்தான் என்பது தெரியுமாதலால் நேருஜி பலமாகச் சிரித்து விட்டு, சற்று நேரம் நின்ற இடத்திலிருந்தே தோட்டத்தைச் சுற்றிலும் நோட்டம்விட்டார். ரோஜா மலர்ச் செண்டு அளித்து எம்.எஸ். வரவேற்றார். பத்து நிமிஷம் சதாசிவம் - எம்.எஸ். இல்லத்தில் அவர்களுடன் அளவளாவி விட்டு, புறப்பட்டுவிட்டார் நேருஜி. அவர் மாடிப்படி இறங்கி வாசலுக்கு வந்தாரோ இல்லையோ, ''என்ன, ஏகாம்பரம்!'' என்று அழைத்தார் சதாசிவம். தலைமைத் தோட்டக்காரர் ஏகாம்பரம், ஒரு பெரிய ரோஜா மலர் மாலையுடன் வந்து அதை நேருஜிக்கு அணிவித்தார்! ''என் தோட்டத்தை இத்தனை அழகாகப் பராமரித்து வருபவர் இவர்தான்'' என்றார் சதாசிவம்.

நேருஜி தமது கழுத்திலிருந்து மாலையைக் கழற்றி, ஏகாம்பரத்தின் தோள்களில் தவழ விட்டுவிட்டுக் காரில் ஏறினார்.

இதில் யாருடைய பெருந்தன்மையைப் போற்றுவது?

**(பேசலாம்)**

• ஆனந்தி திருமணம்...



# எதிர்வரும் அபாயம்!

"ஆறு ஆண்டுகளா பார்த்து வந்த அரசாங்க வேலைய உதறித் தள்ளிட்டு வந்தவன் நான். விவசாயக் குடும்பத்துல பிறந்து, விவசாய ஆபீசல வேலை பார்க்கக் கசந்து போச்சு. காரணம், இந்த இரசாயன உரங்கள், நம்ப விளை நிலங்களோட மண்வளத்தைக் கெடுக்குது. சாப்பிடுற சாப்பாட்டுல நஞ்சைக் கலக்குது. மனிதர்களோட உடல் ஆரோக்கியத்துக்கு உலை வைக்குது. இதெல்லாம் உணர்ந்ததும் இயற்கை விவசாய விழிப்புணர்வு பிரசாரத்துல தீவிரமா இறங்கிட்டேன்!" எனக் கூறும் இயற்கை வேளாண் விஞ்ஞானி நம்மாழ்வார், எழுபது வயது இளைஞர்.

தஞ்சை மாவட்டம், திருக்காட்டுப் பள்ளி அருகே இளங்காடு கிராமத்தில் பிறந்தவர். கோவில்பட்டி, மண்டல வேளாண் ஆராய்ச்சி நிலையத்தில் துணை விஞ்ஞானியாகப் பணியாற்றியவர். கடந்த இருபத்தி மூன்று ஆண்டுகளாக இயற்கை வேளாண் விஞ்ஞானியாக, ஆத்மார்த்தமாக இயங்கி வருபவர்.

"டபிள்யூ.ஆர்.கிரேஸ் என்கிற அமெரிக்கக் கம்பெனி எப்படியோ நம்முடைய வேம்பு மரத்துக்கான காப்புரிமையைப் பெற்றுவிட்டது. அதனை எதிர்த்து ஜெர்மனியில், ஐரோப்பிய காப்புரிமை அலுவலகத்தில் வழக்குத் தொடரப்பட்டது. நம் தேசத்தின் வேம்புக்காக இந்தியாவிலிருந்து ஐந்து பேர் சாட்சிகளாகச் சென்றிருந்தோம். அவர்களில் நானும் ஒருவன். வழக்கின் முடிவில் அமெரிக்கக் கம்பெனியிடமிருந்து வேம்பு மீதான காப்புரிமை திரும்பப் பெறப்பட்டது" என்கிறார் நம்மாழ்வார்.

"விவசாயிகள்ல 82 சதவிகிதம் பேர் தொடர்ந்து கடனாளிகளாகவே வாழ்ந்து வர்றாங்க. காரணம், இரசாயனம் கலந்த வேளாண் முறைதான். வேளாண்துறையோ இரசாயன விவசாயத்தையே ஊக்கப்படுத்தி வருது. விவசாயிகளுக்கு வங்கிக் கடன்ல ஒரு பகுதி, இரசாயன உரங்களாத்தான் கெடைக்குது. அப்புறம் எப்படி அவங்களால இயற்கை விவசாயத்துக்கு மாறி வர முடியும்?

பயிர்களைத் தாக்கும் பூச்சிகளைத் தின்பதற்கு, நிறைய பூச்சிகளும், பறவைகளும் இயற்கையிலேயே இருக்கு. பொருத்தமில்லாத பருவத்தில் சாகுபடி செய்வது, பொருந்தாத பயிர்கள் மற்றும் ரகங்களைப் பயிர் செய்வதை விவசாயிகள் முதலில் தவிர்க்க வேண்டும்.

தமிழ்நாட்டுல கொஞ்சம் விழிப்புணர்வு பெற்ற விவசாயிகள், இயற்கை விவசாய செயல்பாட்டில் இயங்கி வர்றாங்க. இந்த வருஷம் ஈரோடு மாவட்டத்துல மட்டும், சுமார் முப்பதாயிரம் ஏக்கர்ல ஒற்றை நாற்று சாகுபடி செஞ்சு, இயற்கை விவசாயத்துல நல்ல மகசூல் கண்டு வெற்றி அடைஞ்சிருக்காங்க.

இந்தியாவின் அறுபது சதவிகித விளை நிலங்கள் வானம் பார்த்த பூமியாவே இருக்கு. இவை நவதானிய சாகுபடிக்கே ஏற்றது. இங்கு கலப்புப் பண்ணைகள் உருவாவதற்கான சாத்தியங்கள் இருக்கு. மரங்கள், பயிர்கள், கால்நடைகள் கலந்த ஒருங்கிணைந்த சாகுபடி முறைகளால் இயற்கை வேளாண்மை எதிர்காலங்களில் மேன்மையுற வாய்ப்புகள் நிறைய இருக்கு.

"கடந்த பத்து வருஷத்துல 1,66,304

# கிலோ அரிசி

விவசாயிகள் தற்கொலை பண்ணிக் கிட்டதா நேஷனல் க்ரைம் ரெக்கார்டு புள்ளி விவரம் கூறுது. ரொம்ப வருஷங்க ளாகவே கிராமப்புறங்கள்ல முன்னாடி நடந்து வந்த 'குடிமராமத்து' மறைஞ்சும் மறந்தும் போயிடுச்சு.

அது கட்டாயமாகக் கடைபிடிக்கப்பட வேண்டும். வேளாண் துறையின் வளர்ச்சித் திட்டங்களும், அரசியல் கட்சிகளின் நடைமுறைகளும் ஊர்ச் சமூகத்தின் ஒற்றுமையைக் குலைத்துவிட்டன. ராஜீவ்காந்தி காலத்தில் கொண்டுவரப்பட்ட பஞ்சாயத்து ராஜ் சட்டம், 29 வகையான வளர்ச்சித் திட்டங்களை ஊராட்சி மன்றங்களே செய்து கொள்ள முடியும் எனச் சொல்கிறது. இந்தக் கொள்கை, இதுவரையில் நடைமுறைப்படுத்தப்படவில்லை. நீராதாரங்கள் மேடு தட்டியும், கருவேல மரங்கள் மண்டிப் போயும் பயனற்றுக் கிடக்கின்றன. கிராம புனரமைப்பு அடிப்படையில், முதல் கட்டமாக மக்களை இணைத்துக் கொண்டு அரசு இதனைச் செயல்படுத்த முன்வர வேண்டும். பின்னர் அந்தக் குடிமராமத்தினை, கிராமப் பொதுமக்கள் தங்கள் பொறுப்பிலே செய்துவர வேண்டும்.

இந்த அஞ்சு வருஷத்துக்குள்ள உணவுப் பொருட்கள் முப்பத்தியெட்டு விழுக்காடு விலையேறிப் போய்விட்டதாகப் புள்ளி விவரங்கள் தகவல் சொல்லுது. இதே நிலை நீடிச்சா, இன்னும் பத்துப் பதினஞ்சு வருஷத்துல ஒரு கிலோ அரிசி நூறு ரூபாய்க்குக்கூட விற்கலாம். அப்பவும் நெல் விவசாயிக்கு எந்த நன்மையும் கிடைக்கப் போறதில்லை. இடைத்தரகர்களும் சந்தை பெரு வியாபாரிகளுமே பெருத்த லாபம் அடைவார்கள். ஏனெனில், நுகர்வோர் தரும் விலையில் ஒரு சிறு பகுதி மட்டுமே, உற்பத்தி விவசாயிக்குப் போய்ச் சேர்கிறது. அப்பவும் 'உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குகூட மிஞ்சாது' '' எனக் குமுறுகிறார் இயற்கை வேளாண் விஞ்ஞானி நம்மாழ்வார்.

**செய்திச் சித்திரம் : ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



● நம்மாழ்வார்

# ரூபாய் 100?

# கலகம் பிறந்தது எனக்காக - 8

'கால் காசாக இருந்தாலும் கவர்மெண்ட் காசா இருக்கணும். அரைக்காசாக இருந்தாலும் அரசாங்க காசா இருக்கணும்.'

அரசுவேலை பற்றிய ஒரு பிரம்மாண்ட இமேஜ் எல்லோருக்குமே உண்டு. அதை வேரோடும் வேரடி மண்ணோடும் பிடுங்கியெறிந்த பெருமை ஜெயலலிதாவைச் சாரும். ஆனாலும் அம்மாவுக்கு அரசு ஊழியர்கள் மீது ஏன் அத்தனை பாசம் என்று தெரியவில்லை. திடீரென ஒரு நாள், அரசு வருமானத்தில் எத்தனை சதவிகிதம் அரசு ஊழியர்களுக்கு மாத்திரம் சம்பளமாகப் போகிறது என்ற ஆராய்ச்சியில் இறங்கினார். அதிர்ச்சி - மொத்தம் 94 சதவிகிதம்! அம்மாடியோவ்!

## "சட்டமன்றம்

விஷயம் செய்தித்தாள்களில் இடம் பிடித்தது. அத்தனை பணத்தையும் அவர்களே எடுத்துக்கொண்டு, மிச்ச மீதியைத்தான் திட்டங்களுக்குப் பயன்படுத்துகிறார்களா? மக்கள் மத்தியில் சந்தேக விதை விதைக்கப்பட்டது.

அரசு ஊழியர்களுக்கு வழங்கப்பட்ட சலுகைகள், ஒன்றன்பின் ஒன்றாக ரத்து செய்யப்பட்டன. மக்கள் நலப்பணியாளர்கள், சாலைப்பணியாளர்கள், கதர்வாரியத் தொழிலாளர்கள், இன்னும் சில துறைத் தொழிலாளர்கள் என எல்லோருக்கும் கழுத்தில் மாலை போடப்பட்டு வரிசையாக வீட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்டனர். ஜெயலலிதா செய்த அதிரடி ஆட்குறைப்பு, அரசு ஊழியர்கள் மத்தியில் அதிர்ச்சியை ஏற்படுத்தியது.

'அ.தி.மு.க. அரசு எங்கள்மீது கை வைத்துவிட்டது! என்ன செய்யப்போகிறோம் பாருங்கள்' என்று வீரவசனம் பேசின அரசு ஊழியர் சங்கங்கள். வசனத்தில் வெளிப்படுத்தப்பட்ட அத்தனை குறிப்புகளும் அரசின் கவனத்துக்குச் சென்றன. ஆக்ஷன் என்று ஒன்று இருந்தால் ரியாக்ஷனும் இருக்கத்தானே செய்யும்?

30.6.2003. சென்னை பட்டினப்பாக்கம் அரசு ஊழியர் குடியிருப்பு. திடீரென ஜீப்புகளில் வந்து இறங்கினர் போலீஸார். எந்த வீட்டுக்குள் நுழைவது என்றெல்லாம் யோசிக்கவே இல்லை. சகட்டுமேனிக்கு நுழைந்தனர். அங்கிருந்த ஆண்களை எல்லாம் அள்ளிப் போட்டுக்கொண்டு, புறப்பட்டன ஜீப்புகள்.

செய்தி காட்டுத்தீயாகப் பரவியது. ஆத்திரம் மேலிட அரசு ஊழியர்கள் தொடர் வேலை நிறுத்தத்தை அறிவித்தார்கள். அரசு எந்திரமே முடங்கிவிடலாம் என்ற சூழ்நிலை. அம்மா அடுத்த அஸ்திரத்தை எடுத்தார். அதன் பெயர், எஸ்மா.

2003, ஜூலை 4. தமிழ்நாட்டின் மாவட்ட ஆட்சியர்கள் அலுவலகங்களில் நோட்டீஸ் ஒட்டப்பட்டது. எல்லா அலுவலகங்களிலும், எல்லாமே பதவி நீக்கம் செய்யப்பட்ட அரசு ஊழியர்கள் மற்றும் ஆசிரியர்களின் பட்டியல். மொத்தம் ஒன்றரை லட்ச அரசு ஊழியர்கள், ஆசிரியர்களை ஒரே ஒரு உத்தரவு மூலம் பதவி நீக்கம் செய்துவிட்டது ஜெ. அரசு!

எங்கு பார்த்தாலும் பதற்றம்; பயம். ஜெயலலிதாவுக்கு எதிராகக் கண்டனங்கள். பத்திரிகைகள் தலையங்கமும் கவர் ஸ்டோரியும் எழுதித் தீர்த்தன. சர்ச்சைத் தீ கொழுந்துவிட்டு எரிந்தது.

உலகவங்கியின் கைங்கர்யம் இதில் இருப்பதாக விமர்சனங்கள் எழுந்தன.

## ஆர்.முத்துக்குமார்

வழக்குகள்; விசாரணைகள். இறுதியாக உச்சநீதிமன்றத்தின் உதவியால், பதவி நீக்கம் செய்யப்பட்டவர்களில் 6072 பேர் தவிர, மற்ற எல்லோருக்கும் திரும்ப பணி கிடைத்தது. ஆனால், அரசு ஊழியர்களுக்கு இருந்த கோபம் நீரு பூத்த நெருப்பாகவே இருந்தது.

அடுத்து வந்த சட்டமன்றத் தேர்தலில் ஜெயலலிதா வீட்டுக்குப் போய்விட்டார். அதிரடி ராணியாக உருமாறி, அவர் எடுத்த முடிவு இன்றைக்கும் சர்ச்சைக்குரிய முடிவாகவே பார்க்கப்படுகிறது.

ஜெயலலிதாவின் வாழ்க்கைப் புத்தகத்தில்



# “செத்துவிட்டது”

## - ஜெயலலிதா ஆவேசம்

மிக முக்கியமான பக்கம். அது, 1989ல் கருணாநிதி ஆட்சியில் இருந்தபோது நடந்த சட்டமன்றத் தகராறு.

மார்ச் மாத இறுதியில் நடந்துகொண்டிருந்த பட்ஜெட் கூட்டத் தொடர்... சபாநாயகர் சபை மரபுப்படி திருக்குறள் ஒன்றைப் படித்தார். முடித்ததும் பட்ஜெட் உரையைப் படிக்கத் தொடங்கினார் முதல்வர் கருணாநிதி.

ஜெயலலிதா எதிர்க்கட்சித் தலைவர் இருக்கையில். அ.தி.மு.க. உறுப்பினர் ஒருவர் ஏதோ ஒரு விஷயத்தைப் பேச முயல, அதற்கு சபாநாயகர் அனுமதி மறுக்க, மன்றத்தில் பலத்த வாக்குவாதம்; கூச்சல்; குழப்பம். பட்ஜெட் உரை கிழித்துப் பறக்கவிடப்பட்டது.

இடையில் ஏற்பட்ட தள்ளுமுள்ளுவில் முதல்வர் கருணாநிதியின் மூக்குக் கண்ணாடி கீழே விழுந்து நொறுங்கியது. சில நிமிடங்களில் தலைவிரிகோலமாக சட்டமன்றத்தை விட்டு வெளியே வந்தார் ஜெயலலிதா.

''சட்டமன்றம் செத்துவிட்டது'' - இதுதான் ஜெயலலிதா சொன்ன வாசகம்.

அப்படி என்னதான் நடந்தது சட்டமன்றத்துக்குள்? அத்தனைக்கும் பின்னணி ஒரு ராஜினாமா கடிதம்!

(கடிதம் அடுத்த வாரம்)

**திறமை இருந்தால் போதும். மொழி ஒரு பிரச்னையே இல்லை என்பதை மீண்டும் ஒருமுறை நிரூபித்திருக்கிறார் மலையாள இயக்குனர் சித்திக். 'சாது மிரண்டா' படத்தின் வெற்றிக்களிப்பில் இருந்தவரைச் சந்தித்தோம்...**

**மலையாளப் படத்துக்கும் தமிழ்ப் படத்துக்கும் என்ன வித்தியாசம்?**

''உலகம் முழுவதும் உணர்வுகள் ஒன்றுதான். அதுல வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாது. சினிமாங்கறது ஒரு மாயை. அதுல டெக்னிக்கலா நிறைய வேறுபாடுகள் இருக்கு. மலையாளத்துல பெரிய பட்ஜெட் படங்கள் அதிகமா வராது. தமிழ்ல பெரிய பட்ஜெட் படங்கள் அதிகமா வருது. அதுதான் எனக்கு வித்தியாசமாத் தெரியுது.''

**டெக்னீஷியன்களை, படத்துக்குப் படம் மாத்துறீங்களே, அதனால பாதிப்பு வராதா?**

''எல்லா டெக்னீஷியன்களும் நல்ல உழைப்பாளிகள்; நல்ல திறமைசாலிகள்தான். என்னோடது பட்ஜெட் படம். ஒவ்வொரு பட்ஜெட்டுக்கு ஏத்த மாதிரிதான் நான் டெக்னீஷியன்களைத் தேர்ந்தெடுப்பேன்.''

**ஹீரோவுக்குக் கதையா, கதைக்கு ஹீரோவா? எது ஆரோக்கியமானது?**

''இரண்டுமே ஆரோக்கியமானவைதான். நான் இரண்டையுமே சந்திச்சிருக்கேன். மலையாளத்துல மம்முட்டி கால்ஷீட் கிடைச்ச பிறகுதான் கதை ரெடி பண்ணினேன். அதுதான் 'ஹிட்லர்'. 'சாது மிரண்டா' ஹீரோ பிரசன்னா, நம்ம கதைக்கு ஆப்டா இருப்பாருன்னு தேர்ந்தெடுத்தேன். அதனாலதான் சொல்றேன், எனக்கு ரெண்டுமே ஆரோக்கியம்தான்.''

**நாவலைப் படமாக்குகிற எண்ணம் இருக்கா?**

# ஆரோக்கியமான சினிமான்னா என்ன?

''எனக்கு அந்தமாதிரி எண்ணம் எதுவும் கிடையாது. இனிமேலும் அப்படி எடுக்கமாட்டேன். நான் சிந்திக்கற கதைதான் படமா வரணும்னு விரும்பறேன். நாவலைப் படிச்சுட்டு, கதை தெரிஞ்சுக்கிட்டே ஆடியன்ஸ் படம் பாப்பாங்க. அதுல சுவாரசியம் இருக்காது. ஆனா, எதுவுமே தெரியாம, பின்னாடி என்ன நடக்குமோங்கற ஆர்வம் இருக்கணும்.''

**உங்களோட பார்வையில ஆரோக்கியமான சினிமான்னா என்ன?**

''படத்தைப் பார்த்துட்டு ஆடியன்ஸ் ஆரோக்கியமா ஃபீல் பண்ணணும். படத்தை டைரக்ட் பண்ணின இயக்குனர் ஆரோக்கியமா



**இயக்குனர் சித்திக் பேட்டி**



• 'சாது மிரண்டா' ஹீரோயின் காவ்யா மாதவன்

இருக்கணும்; தயாரிப்பாள ருக்கு வருமானம் கிடைக் கக்கூடிய அளவுக்கு ஆரோக்கியம் இருக் கணும்; படத்துல நடிச்ச நடிகர்களுக்கு, அடுத்த படம் கிடைக்கற மாதிரி ஆரோக்கியம் இருக் கணும்; இப்படி எல்லோரும் ஆரோக்கி யமா இருக்கிற அளவுக்கு, அந்தப் படம் 'ஹிட்' படமா இருக் கணும். அதைத்தான் நான் ஆரோக்கியமான சினிமான்னு சொல்வேன்.''



• பிரசன்னா

## ''படத்தைப் பார்த்துட்டு ஆடியன்ஸ் ஆரோக்கியமா ஃபீல் பண்ணணும். டைரக்ட் பண்ணின இயக்குனர் ஆரோக்கியமா இருக்கணும்.''

**உங்க பேரு கின்னஸ் புக்ல வரப் போறதா பேச்சு அடிபடுதே?**

''நானும் கேள்விப்பட்டேன். உண்மையான்னு தெரியலை. தொடர்ந்து இருபத்தைந்து படங்கள் ஹிட் கொடுத்ததுக்காகன்னு பேசிக்கறாங்க. கின்னஸ் புக்ல பேரு வந்தா சந்தோஷம்தானே.''

**உங்களுக்கு நடிக்க விருப்பம் உண்டா?**

''காலேஜ்ல பி.ஏ. படிச்சுட்டு, 'கலாபவன் மெமிக்ஸ் பரேடு'னு ட்ரூப் ஆரம்பிச்சேன். அதுல, ஜெயராம், கலாபவன்மணி, திலீப், லால் எல்லாரும் உண்டு. அவங்கள்லாம் நடிகர்களாயிட்டாங்க. நான் மட்டும் டைரக்டரா மாறிட்டேன். எனக்கு எப்போதும் நடிக்க விருப்பம் கிடையாது. அந்த ட்ரூப்ல இருந்து இன்னும் நடிகர்களை உருவாக்க வேண்டும். அவ்வளவுதான்.''

– ஆ. முத்துராமலிங்கம்

**க**டைசிப் பரீட்சை எழுதிவிட்டு, பாஸாகிவிடுவோம் என்ற தைரியத்தில் என் டைரியின் புதிய பக்கத்தில் - பள பளப்பான அந்தத் தாளில் இப்படி எழுதி வைத்தேன். ''பரீட்சையில் பாஸாகி, மாசச் சம்பளத்துக்கு மாரடித்து, எவளோ ஒருத்தி யைக் கட்டிக்கொண்டு பிள்ளை பெற்றுப் போட்டு, அவற்றை உருப்படி பண் ணுமே என்று உருகி உடலைக் கரைத்து, கடைசியில் உயிரைப் புழுக விட்டுவிடக் கூடாது!'' அதன்படியே பரீட்சையில் பாஸாகிவிட்டேன். வாழ்க்கையில்? அது 'அவன் எழுதியதுபடி' என்று மனம் மரத்துப் போனது.

**வீ**தியில் இறங்கியதும் அடர்ந்து, படர்ந்து கிடக்கும் வெயிலையே பார்த்துக் கொண்டு நின்றுவிட்டேன்! 'யே... யப்பா' இந்த வெயிலைப் பார்த்து எத்தனை நாளாச்சு என்ற வியப்பு! நாளா... மாசமா...



# கூடு திரும்புதல்!

இல்லை வருஷமா...? எப்படியோ 'வெயிலை' இப்பத்தான் பார்க்க முடிகிறது. பார்க்க முடிகிறது என்றால், கண்ணால் இல்லை; மனசால்.

வெயில் என்ன நிறம்? அத்தனை விவரமாகவா பார்க்கறது! அது இளசாக இருக்கறப்ப என்ன இதமாக இருக்கும். சற்று பழுத்தவுடன்? சடசடவென்று உயர்ந்து உச்சிக்கு நேராக ஏறி உட்கார்ந்து கொண்டிருக்கும்போது? சட்டென்று தாவி, மடமடவென்று இறங்கும்போது? பொழுது சாயும்போது? கடைசிச் சொட்டாய் கருக்கலோடு கரையும்போது? இத்தனை தினுசாக இந்த வெயிலைப் பார்க்க நமக்கு ஏது நேரம்?

அப்போ - சின்ன வயசில் பொழுதன்னைக்கும் வெயிலோடுதான் விளையாட்டு! அப்பக்கூட விளையாட்டுதான் முக்கியமாப்பட்டது - வெயில் இல்லை. 'மண்டையப் பொளக்குற வெயில்ல ஆடாத கழுதைகளா; அம்ம கிம்ம கண்டுறப் போவுது'ன்னு பெரிசுக ஆத்தமாட்டாம புலம்புங்க. அதெல்லாம் அப்ப காதுல எங்க ஏறிச்சு? அப்புறம் அதெல்லாம் எப்படி நழுவிப் போச்சுன்னே நெனவுல இல்லை! திடுதிப்புனு நடந்தாப்புலதான் நடந்துபோச்சு எல்லாம்! படிப்பு முடிஞ்சதுதான் ஜோலி! ஒரு வேலை வெட்டியத் தேடிக்கிடணும்னு வேகம். தெக்க வடக்கனு அலைஞ்சு திரிஞ்சு ஒரு வேலையைத் தேடுறதுக்குள்ள, ஒரு கழுத வயசு ஓடிப் போச்சு! வேலை கிடைக்காத வரைக்கும் அதுதான் பெரும் பிரச்சனையாவே இருந்துச்சு! ஒரு வழியா ஒரு நாற்காலியைத் தேடிப்பிடிச்சு உக்காந்துட்டோம்னு நிம்மதியா இருக்கலாம்னா, அது முடியவா செஞ்சுச்சு! அந்த நாற்காலிக்கு அடியிலேதான் அத்தனை ஜந்துக்களும்! பாம்பு... பல்லி... பாச்சை... பூரான்... தேளு... நட்டுவாக்காளி... ஒரு வண்டி விஷக் கிருமிக! அதுககிட்ட கடிபடாம, விஷம் ஏறிச் சாகாம, உசுரைக் கையில பிடிச்சுக்கிட்டுத் தான் வேலை பார்க்கும்படியா ஆச்சு!

''ஏன்டா வேலை கஷ்டமா இருக்கா; ஒரு வகையாவே இருக்கிறே...?''ன்னு ஐயா, அடிக்கடி கேட்பார். 'வேலை கஷ்டமில்லை. வேலையைச் செய்ய விடாமத் தான் கஷ்டப்படுத்துறானுவ' இதை அவரிடம் சொல்லவே மாட்டேன். ஐயா, சுதந்திரப் போராட்டத் தியாகி; சுதந்திரம் கிடைத்துவிட்டது என்றுதான் இன்னமும் நம்பிக்கொண்டிருக்கிறார். அவரும் எதையோ படித்துவிட்டாற்போல், 'அரசாங்க வேலைக்குப் போன பிற்பாடு இவன் முகவாட்டமே மாறிப் போச்சு'ன்னு சலிச்சுக்குவார்.

காசு தேடிப் போன பிற்பாடுதான் எல்லாம் கண்ணை விட்டு மறைஞ்சுடுச்சு. இந்த மனுஷப்பய வாழ்வுக்குக் காசு தேவையாத்தானே இருக்கு! அது இல்லாட்டி நாம மனுஷன்ல சேர்த்தி இல்லைன்னுல ஆயிப் போயிடுது. அதுக்குப் பயந்துக்கிட்டே வங்கொலையாக் கிடந்து, ரெண்டு காசுகளைப் பாத்துப்பிட்டுக் கரையேறிக்கிடலாம்னு எறங்குச்சு! அப்புறம் எங்குட்டு மேடேற முடிஞ்சது?

இந்தா ஆச்சு ஐம்பத்து எட்டு! இத்தனை வருஷமா ஆடி ஓடி அலைஞ்ச பிற்பாடுதான், என்னத்தடா கண்டோம்னு வருது! இதுகூட நேத்து ராத்திரி வந்த நினைப்புதான். எல்லாம் பறிகொடுத்துவிட்டு, கடைசியாக என்னத்தைப் பாதுகாத்தோம்? நீ ரிடையராயிட்டன்னு, இல்லை, உன்னை ரிடையர் பண்ணிட்டோம்னு ரெண்டு மாலையக் கழுத்துல போட்டுத் துரத்திட்டாங்க! இப்பத்தானே விழிப்பு வருது!

கொலுசு
ஓசைகளுக்கிடையே
குடங்களில்
வலம்வந்த குடிநீர்.
சுருங்கிப்போயிற்று
நாணயங்களுக்கு
ஈடாக பாலித்தீன்
பைகளில்




இரா.நாகராஜன்

தினம் தினம் காலையில் இதே ரோட்டு வழியாகத்தான் போறேன்... வர்றேன்... ஒரு நாளா ரெண்டு நாளா... முப்பது வருஷம்! யப்பா, முப்பது வருஷம்னா சும்மாவா? ஒரு நாளாவது இந்த வெயிலைக் கவனித்திருப்போமா? கவனிப்பது என்றால், கண்களால் பார்ப்பது இல்லை. மேலே விழுவதை உணர்வதில்லை. அதையும் தாண்டி அதைப் பார்ப்பது, இதோ இப்போது பார்க்கிறோமே பரவசத்தோடு, பிரியத்தோடு அது மாதிரி!

வேர்வைப் பிசுபிசுப்பிலும், பஸ்ஸில் அந்த மனுஷ நெரிசலில் நின்றுகொண்டிருக்கும்போது ஏற்படும் புழுக்கத்திலும் உணரப்பட்ட வெயில் இல்லை இது. 'வெயில்' வெயிலாகத்தான் இருக்கிறது. அதனை நெருக்கி நெருக்கி ஷூர்க்கமாக உணர்ந்ததுதான் நமது தவறோ! நான் வேகமாக நடந்தேன். பழக்கதோஷம்! இதே தெருவில் - இதே நேரம்தான் ஆஃபீஸுக்கு ஓடுவேன். எதிரே தள்ளு வண்டியில் காய்கறிக்காரன் குரல் கொடுத்துக் கொண்டே வருவான். ஸ்கூல் பஸ் வரும். எதுவும் கண்ணில் விழாது! பஸ் ஸ்டாப் தான் குறி.

ஏதோ ஒரு ஞாபகத்தில், இல்லை, சரியான ஞாபகத்தில் நான் ஆஃபீஸ் போக பஸ்ஸுக்குக் காத்திருக்கும் பஸ் ஸ்டாப்புக்கு வந்துவிட்டேன். இன்று நான் ஆபீஸுக்குப் போக வேண்டியதில்லை. இன்று மட்டுமல்ல. இனிமேல் என்றுமே. விழுந்தடித்துக் கொண்டு ஓடி, வேர்வை ஒழுக பத்து, பத்துக்குள் கையெழுத்திட்டு விடவேண்டும் என்ற கட்டாயமில்லை. மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்க மாடிப்படி ஏறி இருக்கைக்குப் போக வேண்டியதில்லை!

ஏதோ ஒரு விசை அழுத்த, பஸ் ஸ்டாப்புக்கு வந்துவிட்டேன். நேற்று வந்து நின்றதற்கும் இன்று இப்படி வந்து நிற்பதற்கும் யப்பா! என்ன வித்தியாசம்! இங்கும் வெயில்தான் ஏறி நின்றிருந்தது. அனிச்சையாக இப்போது நான் நகர்ந்து நிழல் தேடவில்லை. வழக்கமான இயக்கம் தான். ஓடுபவர்கள் ஓடிக்கொண்டுதான் இருக்கிறார்கள். நான் பஸ் ஸ்டாப்பிலே நின்றிருந்தேன். எந்தப் பஸ்ஸுக்கும் காத்திராமல் பஸ் ஸ்டாப்பிலே நின்றிருப்பது விநோத அனுபவமாக இருந்தது!

என்றுமில்லாத அதிசயமாக, அந்த பஸ், நான் வழக்கமாக ஆஃபீஸ் போகும் பஸ், கூட்டமில்லாமல் வந்து நின்றது. என்னால் நம்ப முடியவில்லை. சற்று நகர்ந்து அதன் முகத்தைப் பார்த்தேன். அதே பஸ்தான். என் அதிர்ஷ்டத்தை அப்போதுதான் நொந்துகொண்டேன். வழக்கம்போல நின்றும் நிற்காமலும் ஒரு பாவ்லா காட்டி விட்டு நகர்ந்துவிடுமே, அப்படி இல்லை; வெடிப்பாக நின்றது. நல்ல சாவகாசமாக நின்றது!

ஒரு கணம் அந்தப் பஸ்ஸையே பார்த்துக்கொண்டிருந்தேன். ஒரே ஒரு கணம் தான் நெஞ்சில் ஒரு மின்னல் வெட்டிற்று!

எதிர்பாராத அந்தக் கணம்; என்னவென்று யூகிப்பதற்குள் அது நிகழ்ந்துவிட்டது. சட்டென்று நான் பஸ்ஸில் ஏறிக்கொண்டேன். அனிச்சையாக, சரியான சில்லறையை எடுத்து ஆஃபீஸுக்கு டிக்கெட்டும் வாங்கி விட்டேன்!

எப்போதும் அலுவலகத்துக்குச் சற்று தள்ளியே நிற்கும் பஸ், இன்று அதிசயமாக அலுவலக வாசலிலே நின்றது. இன்று எனக்கு எல்லாம் அதிசயமாக நிகழ்கிறது. நினைத்துக்கொண்டே நான் இறங்கிக் கொண்டேன். ஆனால், சற்று தள்ளி தூரமாக நின்று கொண்டு, என் அலுவலக முகப்பினைப் பார்த்தேன். பழைய காலத்துக் கட்டடம் செக்கச் செவேல் என்று கம்பீரத்தோடும் பாரம்பரிய அழகோடும் அது இருக்கிற அழகே தனியாகத் தெரிந்தது! அதைப் பார்த்துக்கொண்டே நின்றேன். முப்பது வருஷமாக நான் புழங்கின இடம். காலையிலிருந்து இருள் கவிழும் வரை நடமாடிய இடம். ஆனாலும், ஏதோ காணாத அதிசயத்தைக் காண்பதுபோல அப்படியே நின்றுவிட்டேன்! என் மனம் விரிந்துகொண்டது. இந்த அழகிய கட்டடத்துக்குள்ளா நான் வேலை பார்த்தேன்! எத்தனை அழகான புல்வெளி. எவ்வளவு மரங்கள். வெயிலும் நிழலும் முத்துக் கோர்த்தாற்போல் படர்ந்து கிடந்தது. வளைந்து நெளிந்து நீளும் நடைபாதை! வழிநெடுகிலும் பூக்களும் இலைகளும் உதிர்ந்து கிடக்கிறது.

இந்த அழகெல்லாம் இத்தனை வருஷங்களாக ஏன் என் கண்ணில் விழவில்லை! திறந்திருந்த ஜன்னல்களுக்குள் புறாக்கள் ஓடி, மறு ஜன்னல் வழியே வெளிவந்து கொண்டிருக்கின்றன. 'க்விக் க்விக்' என்று ஏதோ பட்சிகளின் இரைச்சல்! ஒரே சீராக விட்டு விட்டு ஒலிக்கும் காக்கைகளின் குரல்கள்! நான் ஒரு கணம் முழுசையும் அப்படியே பார்த்தேன். அப்புறம் ஒவ்வொரு பகுதியாகப் பார்த்தேன். பார்த்துக் கொண்டே இருந்தேன். ஒவ்வொன்றிலிருந்தும் வம்பாகத்தான் பார்வையை நீக்கினேன். இந்த இயற்கையின் அழகையும் எளிமையான, இனிமையான தருணங்களையும் இதுவரை பரிச்சயம் பண்ணிக்கொள்ளாமலே இருந்திருக்கிறோமே! அலுவலக உறவுகளில் அடைந்த தோல்வியைவிட, இது மகா தோல்வி! என் தோல்வியை, ஒப்புக் கொள்ளும் தருணம் நெஞ்சு பாரமாகத்தான் இருந்தது! இனி ஒன்றும் செய்ய முடியாது என்றில்லை. மீதமிருக்கின்ற பொழுதுகள் ஆறுதலாக இருந்தன. வீடு திரும்பினேன். ●

''உங்களுடைய எதிர்காலக் கனவு என்ன?''

''வேளா வேளைக்கு நல்லா சாப்பிட்டுத் தூங்கணும். அப்பத்தானே கனவு வரும்.''

- ஜீ.வீ.சுபாஷ்



படுதலம் சுகுமாரன்

அண்ணா சதுக்கம். கடற்காற்று, கரை கடந்து வீசிக்கொண்டிருந்தது.

பொன்ராஜ், காரை நேப்பியர் பாலத்தையொட்டி நிறுத்தியிருந்தார். மஃப்டியில் போலீஸார். சாலைத் திருப்



# புள்ளிகள்... கோலங்கள்...

பத்தில் பதுங்கியிருந்தது ஜீப். 'ஏ.சி.யின் ஏற்பாடு' என்று தெரிந்துகொண்டார்.

'பேச அழைத்தவன் எப்படி இருப்பான்? தன்னைப் பற்றி ஓர் அடையாளத்தையும் சொல்லவில்லை. நானும் கேட்கவில்லையே' பார்வையைச் சுழலவிட்டார்.

நிகழ்காலக் கவலையை மீறி... கடந்த கால நினைவுகள் பிறிட்டன.

பொன்ராஜின் இளம் பருவத்தில், திருவல்லிக்கேணியில்தான் வசித்தது குடும்பம். அவர் அப்பாவுக்கு மரக் கடையில் கணக்காளர் உத்தியோகம். சொற்ப சம்பளம்.

குழந்தைகளின் ஒரே பொழுதுபோக்கு, இந்த மெரினா கடற்கரைதான்.

பக்கத்தில்தான் இருக்கிறது என்றாலும், அடிக்கடி வந்துவிட முடியாது.

வாரத்தில் ஒரு நாள் அப்பா, பொன்ராஜிடம் எட்டணா கொடுப்பார்.

அதை வாங்கிக்கொண்டு தம்பிகள், தங்கைகளை கடற்கரைக்கு அழைத்து வந்து விளையாடி... அப்பப்பா...

அது சவாலான வேலைதான். இப்போது போல் போக்குவரத்து நெரிசல் இல்லையென்றாலும், துருதுருவென்று சாலையெங்கும் ஓட்டம் காட்டும், தம்பிகளையும், சின்னஞ்சிறுசுகளான தங்கைகளையும் இரண்டு கைகளில் பிடித்துக் கொண்டு சாலையைக் கடப்பதும்... அலைகளில் இறங்கிவிடாமலும் கூட்டத்தில் தொலைந்துவிடாமலும் கவனித்துக்கொள்ள வேண்டும்.

அதுகூடப் பரவாயில்லை. கடற்கரையில் விற்கும் எல்லாவற்றையும் வாங்கித் தரச் சொல்லி அடம்பிடிப்பார்கள். ஒரு எட்டணாவில் எல்லோர் ஆசையும் தீர்ந்துவிட முடியுமா என்ன!

அதனால் வீட்டிலேயே சீட்டு குலுக்கிப் போட்டு, என்ன வாங்குவதென்று தீர்மானிப்பார்கள். 'சுண்டல்' விழுந்தால் எட்டணாவுக்கும் வாங்கிப் பகிர்ந்து கொள்வார்கள். சிலமுறை பட்டாணி, கடலை என்று வரும். இதைத் தவிர, வேறு எழுதினால் கட்டுப்படி ஆகாது என்பதால், பொன்ராஜ் அவற்றை சீட்டுகளில் எழுதுவதே இல்லை.

இந்த இரகசியம் ரொம்ப நாள் வரைக்கும் தம்பிகளுக்குத் தெரியாது. ஒவ்வொரு முறை சீட்டு குலுக்கும்போதும், அவர்கள் விரும்பியது வரவேண்டும் என்று கடவுளைக் கண்மூடி வேண்டுவார்கள். கடவுள் அருள் கிடைக்க, அவர்கள் பல வருடங்கள் காத்திருக்கவேண்டியிருந்தது.

(தொடரும்)

குருவாக்கு

கஷ்டங்களைச் சொல்லிக்கொள்ளாமல் யாராலும் இருக்கமுடியாது. வெளிப் படையாகச் சொன்னாலே அதில் ஒரு நிம்மதி பிறக்கிறது. கண்ட இடத்தில் போய்ச் சொல்லிக்கொள்ளாமல் - கேட்பவர்கள் எப்படி எடுத்துக் கொள்வார்களோ என்றில்லாமல் - பகவானிடம் கஷ்டத்தைச் சொல்லிக் கொள்ளலாம். அவன் கிருபாசமுத்திரமாயிருந்து, நாம் கேட்காமலே கஷ்ட நிவிருத்தி தந்தாலும் சரி, அல்லது பலனைத் தரும் பலதாதா என்கிற முறையில் நம் பாவத்துக்குத் தண்டித்தே தீருவான் என்றாலும் சரி, அல்லது கஷ்டத்தை மாற்றாமலே அதைத் தாங்கிக் கொள்ளும் பக்குவத்தை நமக்குத் தந்தாலும் சரி, அவனிடம் முறையிட்டுக் கொள்வதே ஓரளவு சாந்தி.

ஆனால், வாஸ்தவத்தில் நான் ஈஸ்வர பக்தி என்று சொல்வது நம் கஷ்ட நிவிருத்திக்காகப் பிரார்த்திப்பதை அல்ல. அல்லது நமக்குச் சந்தோஷ வாழ்வைத் தந்தவனுக்கு நன்றியாக, பக்தி செலுத்த வேண்டும் என்றும் சொல்லவில்லை. நான் அப்படிச் சொன்னால், 'மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றத்தான் வேண்டும். நம்மைப் படைத்தவன் நமக்கு நல்வாழ்வு தரத்தான் வேண்டும்! அது அவன் கடமை. இதற்கு என்ன நன்றி?' என்று யாராவது ஆட்சேபிக்கலாம்.

ஆகவே, இதற்கெல்லாம் நான் பக்தியைச் சொல்லவில்லை. பின் எதற்குச் சொல்கிறேனென்றால், இப்போது கஷ்டம், சந்தோஷம் என்ற இரண்டு வார்த்தைகளைச் சொன்னேனே, இந்த இரண்டுமே மனசை ஆட்டுபவைதாம். மனம் ஆடாமல் இருப்பதுதான் உண்மையான ஆனந்தம். மற்ற சந்தோஷங்கள் எதுவும் நிரமந்தரமானவை அல்ல! ஸ்வாமி என்று நினைக்கும்போதே ஞானம், சாந்தம் என்ற இரண்டு பாவமும் நம் மனசிலும் வருகின்றன. எனவே, ஸ்வாமியைத் தியானம் செய்யச் செய்ய, இந்த ஞானம் சாந்தம் இரண்டும் நமக்கு நன்றாகச் சித்திக்கின்றன. இதற்கே ஸ்வாமி வேண்டும். அவரது ஸ்மரணையான பக்தி வேண்டும் என்கிறேன்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# ஆனந்தம்

# செல்ஃபோன் சிற்றிதழ்!

ஆபாச ஜோக்ஸ், படங்கள் அனுப்பி செல்ஃபோனின் எஸ்.எம்.எஸ். சேவை சூழலையே சிலர் சிறுமைபடுத்திக் கொண்டிருக்க, **'வணக்கம், இது கன்னிக் கோவில் இராஜாவின் எஸ்.எம்.எஸ். ஹைக்கூ இதழ்'** என்ற அறிவிப்புடன், தினந்தோறும் காலை ஆறு மணியி லிருந்து ஏழு மணிக்குள், செல்ஃபோனுக் குள் வந்து விழும் ஹைக்கூ இதழ், இலக்கிய வட்டாரத்தில் ரொம்பவே பிர பலம்.

நாள்தோறும் ஒரு கவிஞரின் ஹைக்கூ, சனிக்கிழமைகளில் மகளிர் ஹைக்கூ, ஞாயிறுகளில் சிற்றிதழ் அறிமுகம், இலக் கிய விழா குறித்த தகவல்களோடு போலியோ தினம், இரத்த தான முகாம் குறித்த அறிவிப்புகள் என கொஞ்சம் சமூக அக்கறையும் சேர்ந்து வெளி வரு கிறது.

நான்காம் ஆண்டில் வெற்றிகர மாகப் போய்க்கொண்டிருக்கும் இந்த எஸ்.எம்.எஸ். இதழுக்கான விதை விழுந் தது எப்படி? இராஜாவே பேசுகிறார்:

''2005ஆம் ஆண்டு ஜனவரி 15ஆம் தேதிதான் எஸ்.எம்.எஸ். ஹைக்கூ இதழுக்கான விதை விழுந்த நாள். அன்னிக்கு திருவள்ளுவர் தினம்ங் கிறதுனால நண்பர்களுக்கெல்லாம் திருக்குறளை எஸ்.எம்.எஸ்ஸா அனுப் பினேன். அதுக்கு நண்பர்கள் மத்தி யில் பயங்கர வரவேற்பு. அந்த வர வேற்புத் தந்த உற்சாகத்தில் தொடர்ந்து திருக்குறளையே அனுப்பிக்கிட்டிருந் தேன். அப்பதான் ஒரு நண்பர், 'நீதான் நல்லா கவிதையெல்லாம் எழுதுவியே. உன்னோட ஹைக்கூக்களையும் இப்படி அனுப்பலாமே'ன்னாரு. அன்னிக்கு ஆரம் பிச்சதுதான் இந்த எஸ்.எம்.எஸ். ஹைக்கூ இதழ் பயணம்.

ஆரம்பத்தில், என்னோட கவிதை களை மட்டுமே அனுப்பிக்கிட்டிருந் தேன். அப்புறமா மற்றவர்களின் கவிதைகளையும் அனுப்ப ஆரம்பிச்ச தும், அது ஓர் இதழ் வடிவமாக மாறி, என்னை வேறு ஒரு தளத்துக்குக் கொண்டுபோனது. வெறும் முப்பத்தைந்து நண்பர்களோடு இருந்த எனக்கு, இப்போது நானூறுக்கும் மேற்பட்ட நண்பர்கள். அத் தனை பேரும் சமூக அக்கறை உள்ள வர்கள்'' என்று பெருமிதப்படும் கன்னிக் கோவில் இராஜாவின் எஸ்.எம்.எஸ். இதழ் வாசகர்களில், முக்கியமான இலக்கிய ஜாம்பவான்களும் அடக்கம்.

ஓர் இலக்கிய விழாவுக்கு அழைப்பிதழ் கிடைக்காமல், எஸ்.எம்.எஸ். ஹைக்கூ இதழ் மூலம் தகவல் தெரிந்துகொண்டு, கூட்டத்துக்கு வந்த கவிஞர் இளம்பிறை, அதை விழா மேடையிலேயே கூறி பாராட்டியதை, தமது இதழ் வெற்றியாகக் கருதுவதாகக் கூறும் இவர் சென்னை அபிராமபுரம் கன்னிக்கோவில் தெருவில் வசித்து வருகிறார். தனியார் நிறுவனம் ஒன்றில் கம்ப்யூட்



• கன்னிக்கோவில் இராஜா

**செல்லில் வந்த கவிதை**

அதிர்ச்சியில் ஆயா
அரைக்கீரை விற்கிறான்
அம்பானி

-பரிதியன்பன்

# SMS ராஜா!

டர் டிசைனராகவும் பணிபுரிகிறார். இது வரை 'தொப்புள் கொடி', 'கன்னிக்கோவில் முதல் தெரு', 'சென்னைவாசி' ஆகிய கவிதை நூல்களை எழுதியிருக்கிறார்.

ஒரு வருத்தமிருக்கிறது கன்னிக் கோவில் இராஜாவுக்கு. ''எஸ்.எம். எஸ். ஹைக்கூ இதழ் வாசகர்களில் தொண்ணூறு சதவிகிதம் பேர், தமிழ்மொழி வசதியில்லாத செல் ஃபோன்களையே வைத்திருக் கிறார்கள். அதனால், இதனை ஆங்கிலமொழி உதவியோடு தமிங்கிலமாகவே நடத்தவேண்டி யிருக்கிறது. இது ரொம்பவே உறுத்தலா யிருக்கு. எல்லோரும், தமிழ் மொழி வசதியுடைய செல்ஃபோனுக்கு மாறிட் டாங்கன்னா ரொம்ப நல்லாயிருக்கும். முழுமையாக தமிழிலேயே இதனை நடத்தும் நாளைத்தான் ஆவலோடு எதிர் பார்த்திருக்கிறேன்'' என்கிறார். நியாயமான வருத்தம்தானே!

*கன்னிக்கோவில் இராஜா,*
*செல் : 98412 36963*

**- ஜெ.முருகன்**

படங்கள் : **புதுவை இளவேனில், சங்கர்**

இந்திய கிரிக்கெட்டிலிருந்து ஓரம் கட்டப்பட்ட முன்னாள் கேப்டன் அசாருதீனை, அரசியலுக்கு இழுக்கும் முயற்சி பலமாக நடக்கிறது. ஹைதராபாத் மாநகராட்சி தேர்தலில் 'தெலுங்கானா ராஷ்டிர சமிதி கட்சி'யின் சார்பில் அசாருதீனை நிறுத்துவதற்கு ஏற்பாடுகள் செய்து வருகிறார், அந்தக் கட்சியின் தலைவர் சந்திரசேகர ராவ். அண்மையில் உருது பத்திரிகை ஆஃபிஸில் அசாருதீனும், சந்திரசேகர ராவும் சந்தித்துப் பேசினார்கள். இந்தச் சந்திப்புப் பற்றிய தகவல் வெளியில் கசிந்ததும், அசாருதீன், ''எங்கள் சந்திப்பு திட்டமிட்டு நடந்த ஒன்றல்ல; முற்றிலும் எதேச்சையான சந்திப்புதான்'' என்று சொல்லிவிட்டார். ஆனால், சந்திரசேகர ராவ், ''அசாருதீனை, மாநகராட்சித் தேர்தலில் எங்கள் கட்சி சார்பில் களம்மிறக்க மிகுந்த ஆவலாக இருக்கிறோம். அசாருதீனுடன் தொடர்ந்து பேசி, அவரது சம்மதத்தைப் பெற்றுவிடுவோம் என்பது உறுதி!'' என்று அறிக்கை விடுத்திருக்கிறார். ஹைதராபாதில் இது பரபரப்பான விஷயம்.

# மேயராகிறார்

நெல்லூரைச் சேர்ந்த முப்பத்து இரண்டு வயது பெண்மணி லீலாவதி. ''நான் நிம்மதியாக சாக விரும்புகிறேன். என்னைக் கருணைக் கொலை செய்ய தயவு செய்து அனுமதி தாருங்கள்'' என்று ஆந்திர மாநில மனித உரிமை ஆணையத்தில் ஒரு கோரிக்கை மனு சமர்ப்பித்தார். அவர் கடந்த பத்து ஆண்டுகளாக நுரையீரல் பாதிப்புக்குள்ளாகி, மூச்சு விடமுடியாமல் மிகவும் கஷ்டப்படுகிறார். தாமாக மூச்சு விடமுடியாததால், அவருக்கு ஆக்ஸிஜன் செலுத்த வேண்டியிருக்கிறது. அதற்கு தினமும் 700 ரூபாய் செலவாகிறது. ஏழையான அவர்களால் அவ்வளவு செலவு செய்ய முடியவில்லை. ஆறு மாதம் முன்பாகவே இதேபோல ஒரு மனு போட்டார் லீலாவதியின் கணவர். கோர்ட், லீலாவதியை முழுமையான மருத்துவப் பரிசோதனை செய்ய உத்தரவிட்டது. ஆனால், அதற்குச் செலவு செய்ய பத்தாயிரம் ரூபாய் அவரிடமில்லை. இப்போது மீண்டும் கோர்ட் படி ஏறி இருக்கிறார்கள் லீலாவதியும் அவரது கணவரும். லீலாவதியின் பரிதாபத்துக்குரிய நிலைமையைப் பார்த்துவிட்டு முதலமைச்சர், தமது நிவாரண நிதியிலிருந்து ஐம்பதாயிரம் ரூபாய் வழங்க உத்தரவிட்டிருக்கிறார்.



தீவிரவாதிகளின் ஹிட் லிஸ்ட்டில் இருப்பதால்,



# அசாருதீன்!?

ஆந்திர முன்னாள் முதல்வர் சந்திரபாபு நாயுடுவுக்கு, இசட் பிளஸ் (Z+) அந்தஸ்த்தில் பாதுகாப்பு வழங்கப்பட்டுள்ளது. நாயுடுவின் பாதுகாப்புக்காக பழைய அம்பாசிடர் கார்களுக்குப் பதிலாக, நாயுடு ஆட்சியில் இருந்தபோது புதிதாக வாங்கப்பட்ட டாடா சபாரி கார்களை அளிக்க வேண்டும் என்று, நாயுடு சார்பிலும் தெலுங்கு தேசக்கட்சியின் சார்பிலும் பலமுறை முதல்வர் ராஜசேகர ரெட்டியிடம் கோரிக்கை வைக்கப்பட்டது. ஆனால், அவர் அதைக் கண்டுகொள்ளவில்லை. அரசாங்கத்திடம் கேட்டுப் பயனில்லை என்று முடிவு செய்த தெலுங்கு தேசம் கட்சி, புதிதாக கட்சி செலவிலேயே சஃபாரி கார்களை வாங்கி நாயுடுவுக்குக் கொடுத்துவிட்டது.

**அ**ரசாங்க ஊழியர்கள் வேலை பார்க்கும் ஊரில் தங்காமல், அருகில் இருக்கும் நகரத்தில் வசிப்பது மிகவும் சகஜமான விஷயம்தான். ஆனால், அது பெரிய சிக்கலை ஏற்படுத்திவிட்டது ஆந்திராவில். வேலை பார்க்கிற இடத்தில் வசிக்காத அரசு ஊழிர்களின் வீட்டு வாடகைப் படியை, சில மாவட்ட கலெக்டர்கள் கட் பண்ணிவிட்டதால், வெகுண்டு எழுந்து விட்டன அரசு ஊழியர் சங்கங்கள். ''ஐ.ஏ.எஸ். அதிகாரிகளைக் கண்டம் துண்டமாக வெட்டிவிடுவோம்'' என்று பகிரங்கமாக அறிக்கை விட்டுவிட்டார்கள். இது ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மத்தியில் பெரும் சலசலப்பை ஏற்படுத்திவிட்டது. அவர்கள் முதலமைச்சரிடம் முறையிட சில நாட்களில் முதலமைச்சர், அரசு ஊழியர் சங்கத் தலைவர்களைக் கூப்பிட்டு 'அன்புடன்' கண்டிக்க, ஊழியர் சங்கத் தலைவர்கள் மன்னிப்புக் கேட்க விஷயம் முடிவுக்கு வந்தது.

**ஹை**தராபாத் மிருகக்காட்சி சாலையில் இருக்கும் 15 வயது யானையின் பெயர் ரஜினி. அதுதான், கடந்த பல ஆண்டுகளாக, இஸ்லாமியர்கள் மொகரத்தின்போது நடத்தும் ஊர்வலத்தில் முன்னே செல்லும். ஆனால், ரஜினிக்கு வயதாகிவிட்டது என்று சொல்லி, ஹைதராபாதில் உள்ள ஷியா இளைஞர் சங்கம், பத்து லட்சம் ரூபாய் கொடுத்து ஒரு புதிய யானையை வாங்கி, மிருகக்காட்சி சாலைக்கு அன்பளிப்பாக வழங்கி இருக்கிறது. அடுத்த ஆண்டு முதல், மொகரம் ஊர்வலத்தில் கம்பீரமாக புதிய யானை நடைபோடவிருக்கிறது. எட்டு மணி நேரத்துக்குப் பத்தாயிரம் ரூபாய் கட்டணத்தில், யாருக்கு வேண்டுமோ, அவர்கள் யானையை வாடகைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

– கௌதம் ராம்

# 22. "நிஜமாக நீதானா?"



மரத்தடியில் வந்து நின்ற குந்தவி தேவி, சற்று நேரம் அப்படியே நின்று கொண்டிருந்தாள். விக்கிரமன், திரும்பிப் பார்க்கும் வழியாக இல்லை. காவேரியின் நீர்ப் பிரவாகத்திலிருந்து அவன் கண்களை அகற்றவில்லை. ஒரு சிறு கல்லை எடுத்து விக்கிரமனுக்கு அருகில் ஜலத்தில் போட்டாள். 'கொடக்' என்ற சப்தத்துடன், கல் அப்பிரவாகத்தில் விழுந்து முழுகிற்று. சிறு நீர்த்துளிகள் கிளம்பி விக்கிரமன் மேல் தெறித்தன.

குந்தவியின் யுக்தி பலித்தது. விக்கிரமன் திரும்பிப் பார்த்தான். அவனுடைய கண்கள் அகல விரிந்தன. கண் கொட்டாமல் அவளைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். கண்களாலேயே அவளை விழுங்கி விடுபவன்போல் பார்த்தான். அவனுடைய உதடுகள் சற்றுத் திறந்தன. ஏதோ பேச யத்தனிப்பதுபோல். ஆனால், வார்த்தை ஒன்றும் வரவில்லை.

ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, மறுபடியும் திரும்பி காவேரியின் பிரவாகத்தை நோக்கினான்.

குந்தவி, இன்னும் சற்று நேரம் நின்றாள். பிறகு மரத்தடியிலிருந்து வந்து நதிக் கரையில், விக்கிரமனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

அவள் உட்கார்ந்த பிறகு, விக்கிரமனும் இரண்டு மூன்று தடவை அவள் பக்கம் திரும்பினான். ஒவ்வொரு தடவையும் சற்று நேரம் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, வேறு பக்கமாக முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு குந்தவி, ''நான் போகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு எழுந்திருந்தாள்.

விக்கிரமன், மிகவும் அதிசயமடைந்தவனைப்போல் அவளைத் திரும்பிப் பார்த்து, ''நீ பேசினாயா?'' என்று கேட்டான்.

''ஆமாம்; நான் ஊமையில்லை!'' என்றாள் குந்தவி.

குன்றாத அதிசயத்துடன் விக்கிரமன் அவளைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். குந்தவி, மறுபடியும் போகத் தொடங்கினாள்.

''ஏன் போகிறாய்?'' என்றான் விக்கிரமன் தழுதழுத்த குரலில்.

''நீர் பேசுகிற வழியைக் காணோம். அதனால்தான் கிளம்பினேன்'' என்று சொல்லிக்கொண்டே குந்தவி, மறுபடியும் விக்கிரமனுக்கு அருகில் வந்து உட்கார்ந்தாள்.

''எனக்குப் பயமாயிருந்தது!'' என்றான் விக்கிரமன்.

''என்ன பயம்? ஓர் அபலைப் பெண்ணைக் கண்டு பயப்படுகிற நீர் தனி வழியே கிளம்பலாமா?''

''உன்னைக் கண்டு பயப்படவில்லை.''

''பின்னே?''

''நான் காண்பது கனவா அல்லது ஜுர வேகத்தில் தோன்றும் சித்தப்பிரமையா

என்று நினைத்தேன். பேசினால், ஒரு வேளை பிரமை கலைந்துவிடுமோ என்று பயந்தேன்.''

குந்தவி புன்னகையுடன், ''இப்பொழுது என்ன தோன்றுகிறது? கனவா, பிரமையா?'' என்றாள்.

''இன்னமும் சந்தேகமாய்த்தானிருக்கிறது. நீ கோபித்துக்கொள்ளாமலிருந்தால்...?''

''இருந்தால் என்ன?''

''நிஜமாக நீதானா என்று உறுதிப்படுத்திக்கொள்வேன்.''

இவ்விதம் சொல்லி விக்கிரமன், தன்னுடைய கையை குந்தவியின் கன்னத்தின் அருகே கொண்டு போனான். ஜுரக் கனவுகளில் நிகழ்ந்ததுபோல் அந்த

''அப்புறம்?''

''நீ கையினால் தொட முடியாத தெய்வ கன்னிகையல்ல; உயிரும் உணர்ச்சியுமில்லாத தங்க விக்கிரகமும் அல்ல; சாதாரண மானிடப் பெண்தான் என்பது ஒன்று.''

''இன்னும் என்ன?''

''இனிமேல் உன்னைப் பிரிந்து உயிர் வாழ்வது, எனக்கு அசாத்தியமான காரியம் என்பது ஒன்று.''

குந்தவி, வேறு பக்கம் திரும்பிக் கண்களைத் துடைத்துக்கொண்டாள். பிறகு விக்கிரமனைப் பார்த்து, ''என்னை உமக்கு ஞாபகம் இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''ஞாபகமா? நல்ல கேள்வி கேட்டாய்! உன்னைத் தவிர, வேறு எந்த ஞாபகமாவது உண்டா என்று கேட்டிருந்தால் அதிகப்

# பார்த்திபன் கனவு

முகம் உடனே மறைந்து போகவில்லை. குந்தவி, தன் முகத்தைத் திருப்பிக்கொள்ளவும் இல்லை. விக்கிரமனுடைய உள்ளங்கை, மலரின் இதழ்போல் மென்மையான குந்தவியின் கன்னத்தைத் தொட்டது. பிறகு, பிரிய விருப்பமில்லாததுபோல் அங்கேயே இருந்தது. குந்தவி அந்தக் கையைப் பிடித்து அகற்றி, பழையபடி அவனுடைய மடிமீது வைத்தாள்.

புன்னகையுடன், ''உம்முடைய சந்தேகம் தீர்ந்ததா, நிச்சயம் ஏற்பட்டதா?'' என்றாள்.

''சந்தேகம் தீர்ந்தது! பல விஷயங்கள் நிச்சயமாயின'' என்றான் விக்கிரமன்.

''என்னென்ன?''

''நிஜமாக நீதான் இங்கே உட்கார்ந்திருக்கிறாய், வெறும் பிரமையோ கனவோ அல்ல என்பது ஒன்று.''

பொருத்தமாயிருக்கும். பகலிலும், இரவிலும், பிரயாணத்திலும், போர்முனையிலும், கஷ்டத்திலும், சுகத்திலும் உன் முகம் என் மனத்தை விட்டு அகன்றதில்லை. மூன்று வருஷ காலமாக நான் எங்கே போனாலும், எது செய்தாலும், என் இருதய அந்தரங்கத்தில் உன் உருவம் இருந்துகொண்டுதானிருந்தது...''

''என்ன சொல்கிறீர்? நான் உம்மை மாமல்லபுரத்து வீதியில் சந்தித்துப் பத்து நாள்தானே ஆயிற்று? மூன்று வருஷமா..?'' என்றாள் குந்தவி கள்ளச் சிரிப்புடனும் அவநம்பிக்கையுடனும்.

விக்கிரமன், சற்று நேரம் திகைத்துப் போய் மௌனமாயிருந்தான்.

பிறகு, ''ஓஹோ! பத்து நாள்தானா

அமரர் கல்கி

ஆயிற்று?'' என்றான்.

''பின்னே, மூன்று வருஷம் ஜுரம் அடித்துக் கிடந்தீரா?''

''சரிதான்; ஜுரத்தினால்தான் அத்தகைய பிரமை எனக்கு உண்டாயிருக்கிறது. உனக்கும் எனக்கும் வருஷக்கணக்கான சிநேகம் என்று தோன்றுகிறது!''

''ஒரு வேளை மாமல்லபுரத்து வீதியில் என்னைப் பார்த்ததற்கு முன்னாலேயே, எப்போதாவது பார்த்த ஞாபகம் இருக்கிறதோ?'' என்று குந்தவி கேட்டாள்.

விக்கிரமன் சற்று யோசித்து, ''எனக்கு இன்னும் நல்ல ஞாபக சக்தி வரவில்லை. மனம் குழம்பியிருக்கிறது. அதிலும்...'' என்று தயங்கினான்.

''அதிலும், என்ன?'' என்று கேட்டாள் குந்தவி.

''அதிலும் உன்னுடைய நீண்ட கரிய விழிகளைப் பார்த்தேனானால், நினைவு அடியோடு அழிந்து போகிறது. என்னையும் நான் வந்த காரியத்தையும், இவ்வுலகத்தையும் எல்லாவற்றையுமே மறந்துவிடுகிறேன்! வருஷம், மாதம், நாள் எல்லாம் எங்கே ஞாபகம் இருக்கப் போகிறது?''

''உமக்கு இன்னும் ஜுரம்



குணமாகவில்லை. அதனால்தான் இப்படிப் பிதற்றுகிறீர். நீர் இங்கே தனியாக வந்திருக்கக் கூடாது.''

''இல்லை; எனக்கு ஜுரமே இப்போது இல்லை. நீ வேணுமானால் என் கையைத் தொட்டுப் பார்!'' என்று விக்கிரமன் கையை நீட்டினான்.

குந்தவி கையை லேசாகத் தொட்டுவிட்டு, ''அப்பா, கொதிக்கிறதே!'' என்றாள்.

''இருக்கலாம்; ஆனால், அது ஜுரத்தினால் அல்ல...''

''இருக்கட்டும்; கொஞ்சம் என் கண்களைப் பாராமல் வேறு பக்கம் பார்த்து ஞாபகப்படுத்திக்கொண்டு சொல்லும். நீர் யார், எங்கிருந்து வந்தீர் என்பதாவது ஞாபகம் இருக்கிறதா? எல்லாமே மறந்து போய்விட்டதா?'' என்று குந்தவி கேட்டாள்.

''ஆமாம்; இங்கே வந்து நதிக்கரையில் உட்கார்ந்து அதையெல்லாம் ஞாபகப் படுத்திக்கொண்டேன். செண்பகத் தீவிலிருந்து கப்பலில் வந்தேன். இரத்தின வியாபாரம் செய்வதற்காக...''

''மாமல்லபுரத்து வீதியில் என்னைப் பார்த்த விஷயமும் ஞாபகம் இருக்கிறதல்லவா?''

''இருக்கிறது.''

''அரண்மனைக்கு வாரும்; சக்கரவர்த்தியின் மகள் இரத்தினம் வாங்குவாள் என்று சொன்னேனே, அது நினைவிருக்கிறதா?''

''இப்போது நினைவு வருகிறது.''

''நீர் ஏன் அரண்மனைக்கு வரவில்லை? ஏன் சொல்லாமல் கிளம்பி இரவுக்கிரவே தனி வழி நடந்து வந்தீர்?''

விக்கிரமன் சற்று நிதானித்து, ''உண்மையைச் சொல்லட்டுமா?'' என்று கேட்டான்.

''இரத்தின வியாபாரிகள், எப்போதாவது உண்மையைச் சொல்லும் வழக்கம் உண்டு என்றால், நீரும் உண்மையைச் சொல்லும்.''

''சத்தியமாய்ச் சொல்லுகிறேன். உன்னை இன்னொரு தடவை பார்த்தே



னானால், மறுபடியும் உன்னைப் பிரிந்து வருவதற்கு மனம் இடங்கொடாது என்ற காரணத்தினால்தான். அது ரொம்பவும் உண்மையான பயம் என்று இப்போது தெரிகிறது...''

''செண்பகத் தீவில் இப்படியெல்லாம் புருஷர்கள் பெண்களிடம் பேசி ஏமாற்றுவது வழக்கமா? இதை அங்கே ஒரு வித்தையாகச் சொல்லிக் கொடுக்கிறார்களா?'' என்று குந்தவி ஏளனமாகக் கேட்டாள்.

''நீ ஒன்றை மறந்துவிடுகிறாய். நான் செண்பகத் தீவிலிருந்து வந்தேனென்றாலும், நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் இந்த சோழ நாட்டில்தான். இந்தப் புண்ணிய காவேரி நதியின் கரையில்தான் நான் ஓடியாடி விளையாடினேன்; இந்த நதியின் பிரவாகத்தில்தான் நீந்தக் கற்றுக்கொண்டேன்; இந்த அழகிய சோழ நாட்டின் குளிர்ந்த மாந்தோப்புகளிலும், தென்னந் தோப்புகளிலும் ஆனந்தமாக எத்தனையோ நாட்கள் உலாவினேன்! ஆகா! நான் செண்பகத் தீவிலிருந்த நாட்களில், எத்தனை நாள் இந்த நாட்டை நினைத்துக்கொண்டு பெருமூச்சுவிட்

டேன்! இந்த காவேரி நதிதீரத்தை நினைத்துக்கொண்டு எத்தனை முறை கண்ணீர் விட்டேன்! மறுபடியும் இந்நாட்டைக் காணவேண்டுமென்று எவ்வளவு ஆசைப்பட்டேன்! அந்த ஆசை இப்போது நிறைவேறியது; உன்னால்தான் நிறைவேறியது! உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?'' என்று விக்கிரமன் ஆர்வத்துடன் கூறினான்.

''எனக்கு நீர் நன்றி செலுத்துவதில் என்ன பிரயோஜனம்? உண்மையில் நீர் நன்றி செலுத்த வேண்டியது கோமகள் குந்தவிக்கு...''

''யார்...?''

''சக்கரவர்த்தியின் மகள் குந்தவி தேவியைச் சொல்லுகிறேன். உம்மை இங்கே அழைத்து வருவதற்கு அவர்தானே அனுமதி தந்தார்! அவருக்குத்தான் நீர் கடமைப்பட்டிருக்கிறீர்.''

''அப்படியா? எனக்குத் தெரிய வேண்டிய விஷயங்கள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. என் மனம் ஒரே குழப்பத்தில் இருக்கிறது. இந்த இடத்துக்கு நான் வந்து சேர்ந்திருக்கிறேன்; காவேரி நதிக்கரையில் உட்கார்ந்திருக்கிறேன் என்பதை நினைத்தாலே, ஒரே ஆச்சரியக் கடலில் மூழ்கிவிடுகிறேன். வேறு ஒன்றிலும் மனம் செல்லவில்லை. நான் எவ்விதம் இங்கு வந்து சேர்ந்தேன் என்பதை விவரமாய்ச் சொல்லவேண்டும். முதலில், நீ யார், உன் பெயர் என்னவென்று தெரிவித்தால் நல்லது.''

''மாமல்லபுரத்தில் சொன்னேனே, ஞாபகம் இல்லையா?''

''உன்னைப் பார்த்த ஞாபகம் மட்டும் தான் இருக்கிறது; வேறொன்றும் நினைவில் இல்லை.''

''என் பெயர் ரோகிணி. சக்கரவர்த்தித் திருமகள் குந்தவி தேவியின் தோழி நான்.''

**உ**ண்மையில், அந்தச் சந்திப்பின் போது குந்தவி தன் பெயர் மாதவி என்று சொன்னாள். அவசரத்தில் சொன்ன கற்பனைப் பெயரானதால், அவளுக்கே அது ஞாபகமில்லை. இப்போது தன் பெயர் 'ரோகிணி' என்றாள்.

அதைக் கேட்ட விக்கிரமன் சொன்னான்:

''ரோகிணி! என்ன அழகான பெயர்! எத்தனையோ நாள் அந்தச் செண்பகத் தீவில், நான் இரவு நேரத்தில் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்ததுண்டு. பிறைச் சந்திரனுக்கு அருகில் ரோகிணி நட்சத்திரம் ஜொலிக்கும் அழகைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்திருக்கிறேன். ஆனால், உன்னுடைய கண்களின் ஜொலிப்புக்கு அந்த ரோகிணி நட்சத்திரத்தின் ஜொலிப்பு கொஞ்சமும் இணையாகாது.''

''உம்முடைய வேஷத்தை நான் கண்டு பிடித்துவிட்டேன்...'' என்றாள் குந்தவி.

விக்கிரமன் சிறிது திடுக்கிட்டு, ''வேஷமா...?'' என்றான்.

''ஆமாம்; உண்மையில் நீர் இரத்தின வியாபாரி அல்ல. நீர் ஒரு கவி. ஊர் சுற்றும் பாணன். உம்முடைய மூட்டையில் இருந்தது இரத்தினம் என்றே நான் நம்பவில்லை!''

விக்கிரமன், சற்று பொறுத்துச் சொன்னான்: ''இப்போது உன்னை நம்பும்படி செய்ய என்னால் முடியாது. ஆனால், அந்த மூட்டையில் இருந்தவை இரத்தினங்கள் தான் என்று ஒரு நாள் உனக்கு நிரூபித்துக் காட்டுவேன். நான் கவியுமல்ல. என்னிடம் அப்படி ஏதாவது திடீரென்று கவிதா சக்தி தோன்றியிருக்குமானால், அதற்கு நீதான் காரணம். உன்னுடைய முகமாகிய சந்திரனி

யுவராஜா மகேந்திரர் காஞ்சிக்குப் போய்விட்டார். சீன தேசத்திலிருந்து யாரோ ஓர் யாத்ரிகர் வந்திருக்கிறாராம்.

விருந்து பொங்கும் அமுத கிரணங்களினால்...''

''போதும், நிறுத்தும் உம்முடைய பரிகாசத்தை. இனிமேல் சகிக்க முடியாது'' என்றாள் குந்தவி.

''பரிகாசமா?'' என்று விக்கிரமன் பெருமூச்சுவிட்டான். பிறகு, ''உனக்குப் பிடிக்காவிட்டால் நான் பேசவில்லை. நான் எப்படி இங்கே வந்து சேர்ந்தேன் என்பதைச் சொன்னால், ரொம்பவும் நன்றி செலுத்துவேன்'' என்றான்.

''காஞ்சியிலிருந்து உறையூர் வரும் பாதையில் மகேந்திர மண்டபம் ஒன்றில் ஜுரவேகத்தினால் பிரக்ஞை இழந்து நீர் கிடந்தீர். அங்கு எப்படி வந்து சேர்ந்தீர்? அதற்கு முன்னால் என்னென்ன நேர்ந்தது கேட்டது. நான் அம்மண்டபத்துக்குள் வந்து பார்த்தேன். மாமல்லபுரத்தில் பார்த்த இரத்தின வியாபாரி நீர்தான் என்று அடையாளம் கண்டுகொண்டேன். பிறகு, குந்தவி தேவியிடம் உம்மையும் அழைத்து வர அனுமதி கேட்டேன். அவர் கருணை செய்து சம்மதித்தார். உமக்கு உடம்பு பூரணமாகக் குணமாகும் வரையில், இங்கேயே உம்மை வைத்திருக்கவும் அனுமதித்திருக்கிறார்.''

''ஜுரக் கனவுகளில் நான் அடிக்கடி உன்னுடைய முகத்தைக் கண்டேன். அதெல்லாம் கனவல்ல; உண்மையிலேயே உன்னைத்தான் பார்த்தேன் என்று இப்போது தெரிகிறது.''

''இருக்கலாம்; நீர் ஜுரமடித்துக் கிடக்



''மன்னரின் ரதத்துக்குப் பின்னாடி ஒரு குதிரை வெறுமே ஓடிவருகிறதே ஏன்?''

''மன்னர் மகா முன் ஜாக்கிரதை பேர்வழியாயிற்றே! அது 'ஸ்டெப்னி' குதிரையாம்!''

**- வி.சகிதா முருகன்**

என்று நீர் சொன்னால், பிறகு நடந்ததை நான் சொல்லுகிறேன்.''

விக்கிரமன் தனக்கு நேர்ந்ததையெல்லாம் ஒருவாறு சுருக்கமாகச் சொன்னான்.

எல்லாவற்றையும் கேட்டுவிட்டு குந்தவி தேவி கூறினாள்:

''சக்கரவர்த்தியின் மூத்த குமாரர் மகேந்திரரும், குந்தவி தேவியும் காஞ்சியிலிருந்து உறையூருக்குப் பிரயாணம் செய்துகொண்டிருந்தார்கள். தேவியுடன் நானும் வந்தேன். அந்தக் காட்டாற்றைத் தாண்டி வந்தபோது, மகேந்திர மண்டபத்துக்குள்ளிருந்து 'அம்மா அம்மா' என்று அலறும் குரல் கையில், அடிக்கடி உம்மை நான் வந்து பார்த்தது உண்மைதான். இவ்வளவுக்கும் குந்தவி தேவியின் கருணைதான் காரணம்.''

விக்கிரமன் ஏதோ யோசனையில் ஆழ்ந்தான். குந்தவி கேட்டாள்:

''சக்கரவர்த்தியின் மகளைப் பற்றி நான் இவ்வளவு சொல்கிறேன். ஒரு வார்த்தையாவது நீர் நன்றி தெரிவிக்கவில்லையே? அவ்வளவு கல் நெஞ்சமா உமக்கு?''

''பல்லவ குலத்தைச் சேர்ந்த யாருக்கும் நான் நன்றி செலுத்த முடியாது!''

''குந்தவி தேவியை நேரில் பார்த்தால் இப்படிச் சொல்ல மாட்டீர். பிறகு

என்னைக்கூட உடனே மறந்துவிடுவீர்.''

''சத்தியமாய் மாட்டேன். ஆயிரம் குந்தவி தேவிகள் உனக்கு இணையாக மாட்டார்கள்! இருக்கட்டும்; இப்போது இந்த மாளிகையில் அவர்கள் இருவரும் இருக்கிறார்களா?''

''யார் இருவரும்?''

''அண்ணனும் தங்கையும்.''

''யுவராஜா மகேந்திரர் இங்கே இல்லை. அவர் திரும்பவும் காஞ்சிக்குப் போய் விட்டார். சீன தேசத்திலிருந்து யாரோ ஒரு யாத்திரிகர் வந்திருக்கிறாராம். அவர் இந்தப் பாரத நாடு முழுவதும் யாத்திரை செய்துவிட்டு, காஞ்சிக்கு வருகிறாராம். 'யுவான் சுவாங்' என்ற விசித்திரமான பெயரையுடையவராம். சக்கரவர்த்திக்கு இருக்கிறது.''

''அப்படிப்பட்ட சக்கரவர்த்தியின் ஆளுகையில் இருப்பது, இந்த சோழ நாட்டுக்குப் பெருமையில்லையா? இந்த நாட்டு அரசகுமாரன் பல்லவ சக்கரவர்த்திக்குக் கப்பம் கட்ட மறுத்து, அந்தச் செண்பகத் தீவில் போய்க் காலம் கழிக்கிறானாமே? அது நியாயமா? உம்முடைய அபிப்பிராயம் என்ன?'' என்று குந்தவி கேட்டு, விக்கிரமனுடைய முகத்தை ஆவலுடன் நோக்கினாள்.

விக்கிரமன் அவளை நிமிர்ந்து நோக்கி, ''என்னைப் பொறுத்தவரையில் நான் இந்தச் சோழ நாட்டில் அடிமையாயிருப்பதைக் காட்டிலும், செண்பகத் தீவில் சுதந்திரப் பிரஜையாக இருப்பதையே

''அரசே! நமது குழந்தை பிறக்கும் போதே வீரனா இருப்பான் போல.''

''எப்படி?''

''எப்பப் பார்த்தாலும் 'வாள்... வாள்'னுதான் கத்தறான்.''

- செல்வராஜா



இச்சமயம் முக்கிய வேலை வந்திருப்பதால், அந்த யுவான் சுவாங்கை உபசரித்து வரவேற்பதற்காக, யுவராஜா உடனே வர வேண்டுமென்று செய்தி வந்தது. இங்கு வந்த இரண்டாம் நாளே மகேந்திரர் புறப்பட்டுப் போய்விட்டார். பார்த்தீரா, எங்கள் பல்லவ சக்கரவர்த்தியின் புகழ் கடல்களுக்கப்பால், வெகு தூரத்திலுள்ள தேசங்களில் எல்லாம் கூடப் பரவியிருப்பதை? நீர் போயிருந்த நாடுகளிலெல்லாம் எப்படி?'' என்று கேட்டாள் குந்தவி.

''ஆம்; அங்கேயெல்லாம்கூட பல்லவ சக்கரவர்த்தியின் புகழ் பரவித்தான் விரும்புவேன்'' என்றான்.

''நிச்சயமாகவா? என் நிமித்தமாகக்கூட நீர் இங்கே இருக்க மாட்டீரா?'' என்று குந்தவி கேட்டபோது, விக்கிரமன் அவளை இரக்கத்துடன் பார்த்து, ''அத்தகைய சோதனைக்கு என்னை உள்ளாக்க வேண்டாம்!'' என்றான்.

இருவரும் ஒருவரையொருவர் அறிந்து கொண்டிருந்தார்கள். ஆனாலும், அறிந்து கொள்ளாதது போல் நடித்தார்கள். இந்த நாடகம் எத்தனை காலம் நீடித்திருக்க முடியும்!

*(தொடரும்)*

# 24.2.08 முதல் 1.3.08 வரை

**மேஷம்:** பண வருவாய் பெருகும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். திருமணக் காரியம் நிறைவேறும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். பூர்வீக சொத்து பாகப்பிரிவினை ஆகும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். குழந்தைகள் பற்றிய மனக் கவலை தீரும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**ரிஷபம்:** எதிலும் பொறுமையுடன் இருத்தல் நலம்; ரிஸ்க் வேண்டாம். வேலைப் பளு அதிகரிக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம் செய்ய நேரிடும். தாயின் உடல் நிலை சற்று பாதிக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நலம் தரும்.

**மிதுனம்:** சுபகாரியங்கள் நடக்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் மாற்றம் உண்டாகும். நல்ல வருமானம் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உடன்பிறந்தவர்கள் மூலம் நற்பலன் உண்டாகும். பரிகாரம் தேவையில்லை.

**கடகம்:** யாரிடமும் வாக்குவாதம் தவிர்க்கவும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. வழக்குத் தள்ளிப் போகும். பொருளாதாரக் கஷ்டம் இருக்கும். கடன் உதவி கிட்டும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்தவும். நண்பர்களால் தொல்லை வரும். வேலையில் அதிக பளு இருக்கும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் ஜாக்கிரதையுடன் இருக்கவும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**சிம்மம்:** சுப காரியம் கைகூடும். இல்லற வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நற்பலனைத் தரும். நீண்ட தூரப் பிரயாணம் செல்வீர்கள். செலவுகள் சுபமானவையாக இருக்கும். கடவுள் அனுக்கிரஹம் கிட்டும். மனச்சலனம் விலகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நன்மை கிட்டும்.

**கன்னி:** வெளிநாட்டுப் பிரயாணம் வந்து சேரும். சுப காரியம் கைகூடும். வீடு மாற்றம் ஏற்படும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். நண்பர் / உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். குரு / சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

நகை-நட்டு வாங்க நேரிடும்னு சொன்னா, கவரிங் நகை என்று கொள்க. பவுன் விக்கற விலைக்கு நகை என்ன, 'நட்டு' கூட கஷ்டம்தான்!

**துலாம்:** பணக் கஷ்டத்தால் மன உளைச்சல் ஏற்படும். சுப நிகழ்ச்சிகள் கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். மனத்தில் ஒருவித கலக்கம் தென்படும். செலவுகள் அளவுக்கு மீறி

# நடக்கும் பலன்கள்!

# தஞ்சை பரத்வாஜ்

அயல்நாட்டு மனிதர்களால் அனு கூலம் ஏற்படும். படிப்பில் முன் னேற்றம் ஏற்படும். செலவுகள் சுபமானவையாக இருக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். நோய் நொடிகள் விலகும். தெய்வ அனு கூலம் ஏற்படும். வியாபாரத்தில், நல்ல முன்னேற்றம் ஏற்படும். வீடு வாங்கும் யோகம் கிட்டும். குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**மகரம்:** எதிலும் நிதானத்துடன் செயல்படுவது நல்லது. வாக்கு வாதம் தவிர்க்கவும். குடும்ப வாழ்வில் விட்டுக்கொடுத்து போவது நல்லது. படிப்பில் கவனம் செலுத்தவும். தொழில் துறையில் சற்று மந்தமான போக்கு இருக்கும். பணக் கஷ்டம் தீரும். உடல் நிலை யில் கவனம் தேவை. கைப் பொருள் மீது உஷார். வழக்கு இழு பறி ஆகும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**கும்பம்:** பணக் கஷ்டம் இருக்காது. நவீன பொருட்கள் சேரும். நீண்ட தூர பிரயாணம் வந்து சேரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங் கும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். ஊதிய உயர்வு கிட்டும். மனச் சஞ்சலம் தீரும். கடன் சுமை தீரும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**மீனம்:** அயல்நாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். மனச் சலனம் தீரும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக் கும். வழக்கு வெற்றி அளிக்கும். வேலை யில் நற்பலன் ஏற்படும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். மனத் தைரியம் மிகுந்து காணப்படும். உடல் ஆரோக்கி யம் பாதிக்காது. குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.



இருக்கும். உத்தியோகத்தில் உயர்வு உண் டாகும். குழந்தைகள் பற்றிய கவலை தீரும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**விருச்சிகம்:** தடை விலகி திருமணம் கைகூடும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். வேலையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். வழக்கு வெற்றி அளிக்கும். வீடு மாற்றம் ஏற்படும். வாக்குவன்மை மேலோங்கும். உடல் நிலை பாதிக்காது. ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**தனுசு:** பண வருவாய் பெருகும்.

# நடக்கும்!

# ஆட்டோ ராணி! (வாணி)

போக்குவரத்து நெரிசல் நிறைந்த சர்தார் வல்லபாய் பட்டேல் சாலையில், விர்ரென்று ஆட்டோவில் பறந்து செல்லும் வாணியைப் பார்க்கும் யாவருக்குமே, ஆச்சரியத்தில் கண்கள் விரியத்தான் செய்யும்.

பெண்கள் ஆட்டோ ஓட்டுவது ஒன்றும் புதிய செய்தி இல்லைதான் என்றாலும், வாணி ஆட்டோ ஓட்டுவது பணம் சம்பாதிப்பதற்காக அல்ல; தம் இரு குழந்தைகளின் நலனுக்காக.



"இரண்டு குழந்தைகளையும் குரோம்பேட்டையிலிருந்து அடையார்ல இருக்கற ஸ்கூலுக்குக் கொண்டுபோய் விடணும். டூவீலர்ல பாதுகாப்பு இல்லை. கார் வாங்கலாம்னா ரொம்பப் பணம் தேவைப்படுது. அதான் ஆட்டோ வாங்கிட்டேன். இது ரொம்பப் பாதுகாப்பா இருக்கு. சரியான நேரத்துக்குக் குழந்தைகளை ஸ்கூலுக்குக் கொண்டுபோய் விடவும், நான் ஆபீஸுக்குச் சீக்கிரம் போகவும் முடியுது" என்றவரை இடைமறித்து, இதனால வீட்டுல பிரச்னைகள் எதும் வரலயா என்றால், "அப்பா, அம்மாவுக்கு இதுல முதல்ல விருப்பம் இல்லை. என்னோட வீட்டுக்காரர்கூட பட்டும் படாமதான் ஆட்டோ ஓட்ட சம்மதிச்சார். ஆனா, என்னோட ப்ரெண்ட்ஸ்கிட்டே இருந்து நல்ல ரெஸ்பான்ஸ்" என்று சொல்லும் வாணி சத்யநாராயணன் சென்னை தரமணியில் உள்ள 'கட்டுமான பொறியியல் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஒிந்தி - மொழி பெயர்ப்பாளராகப் பணிபுரிகிறார்.



* வாணி

"ஒரு நாள் நல்ல அடைமழை. கிண்டி கத்திப்பாரா சிக்னல்ல ஆட்டோவில குழந்தைகளோட வெயிட் பண்ணிக்கிட்டு இருக்கேன். டூவீலர்ல வந்த ஒரு பெரியவர், நான் ஆட்டோவில இருக்கிறத பார்த்துட்டு, என் தலையில் கைய வைச்சு 'நீ நல்லா இருப்பேம்மா, நீ நினைக்கிற மாதிரியே உன் குழந்தைங்க நல்லபடியா வருவாங்க'ன்னு சொல்லிட்டுப் போனாரு. அதுதான் எனக்குக் கிடைச்ச உண்மையான பாராட்டுன்னு நினைக்கிறேன்" என்று சொல்லும் இவருக்கு, ஜெயக்குமார் பாஸ்கர், ராதிகா என்று இரண்டு அழகிய குழந்தைகள் அடையாறில் உள்ள மத்திய அரசுப் பள்ளி ஒன்றில் படிக்கின்றனர். "அடடா! உங்க கிட்ட பேசிக்கிட்டே யிருந்ததுல்ல ஸ்கூலுக்கு நேரமாயிடுச்சு; வரட்டுங்களா" என்று விர்ரென புறப்படுகிற ஆட்டோ, போக்குவரத்தில் கலந்து புள்ளியாகி மறைகிறது.

செய்திச் சித்திரம் : **கிராபியென் ப்ளாக்**

# உடையும் வார்த்தைகள்!

கு. இலக்கியன்



சொல்ல வேண்டும்
என்பதற்காகவே
சொல்லிச் சொல்லி
அழகுபடுத்திக்கொண்ட
வார்த்தைகள்

உன்னிடத்தில்
வருவதற்கு முன்னே
உடைந்துவிடுகின்றன
பனித்துளியைப் போல

சொல்லாது
விட்டுவிடலாமெனில்
பனைமட்டைக் கருக்குகளாக
அறுக்கிறது
மனசின் முடிச்சுகளில்

உடைந்த வார்த்தைகளை
ஒன்றுவிடாது திரட்டி
மீண்டும் உன்னிடத்தில்
வரும்போது
வழக்கம் போலவே
உடைந்து விடுகின்றன!
எனினும்...
உன்னிடத்தில்
உடைபடுவதற்காகவே
ஆயினும்
எனக்குள் எழுந்துகொண்டே
இருக்கின்றன

உனக்கான
வார்த்தைகள்

மாதவி

**என்**ன ஆச்சு? நேற்று வரை நகமும் சதையுமாய், சிரிப்பும் கும்மாளமுமாய் தோழிகளாய் இருந்தவர்கள், இன்று அமெரிக்காவும், ஈராக்கும் போல... எப்படி மாறினார்கள்?!

தெருவே, 'மாமியார் - மருமகளா? இல்லை, ஏதோ அக்கா தங்கச்சியா? காய்கறி வாங்க, ஷாப்பிங் போக, சினிமா, ட்ராமானு போறாங்க! ஒரே டேஸ்ட்டா! எப்படி?'

மூக்கின் மேல் விரல்வைத்துப் பார்த்த குடும்பம்தான் இன்று இப்படி...!

**கல்**யாணமாகி ஆறு மாதங்களாகியும், ஒரு பிரச்னையும் இன்றி எனக்கே போரடித்தது!

''என்ன குழம்பு வைச்சிருக்கே நீ? ரசம் மாதிரி தண்ணியா! மாவுன்னு ஒண்ணு குழம்புக்குக் கரைச்சுக் கொட்டணும்னு தெரியாதா?'' கோபம் வந்ததுபோல் நடித்தேன், மனைவியைப் பார்த்துக் கேட்டு.

மனைவி ஹேமா ஒன்றும் பேசவில்லை.

மாமியார், அதான் என் அம்மா, புடிபுடினு பிடிச்சுட்டா!

''போடா ஃபூல்! கெட்டியா சாப்பிட்டா அதுக்குப் பேரு குழம்பில்ல... கார ஐஸ்க்ரீம்! குழம்புன்னா, என் மருமக வைக்கறா மாதிரித்தான் இருக்கணும்!''

மருமகள் எது செஞ்சாலும் ஓ.கே! படா ரென்று ஜீனி பாட்டிலைக் கீழே போட்டு உடைத்த மருமகளைத் திட்டவேயில்லை! கிட்டே போய், ''தள்ளு! நீ டென்ஷனா இருப்பே! நான் கூட்டிப் பெருக்கறேன்! ஜீனி போனாப் போகுது! கண்ணாடி காலில் குத்திச்சுன்னா டேஞ்சர்'' என்று அன்பாய் பேசியதில், ஹேமா அழுதேவிட்டாள்.

ஒரு நாள் ஹேமா ஆச்சரியமாய்க் கேட்டாள், ''ஏங்க, உங்கம்மாவுக்குக் கோபமே வராதா?''

**யா**ர் கண் பட்டதோ... இப்ப திடீர்னு மாமியாரும் மருமகளும் ரெண்டு நாட்களாய்ப் பேசிக்கொள்வதில்லை!

அதுவாக சரியாப் போகும் என்று நான் பேசாமல் விட்டேன்! சரியாகவில்லை.

ஆகவே, நடுநிலைப் பேச்சு வார்த்தைக்குக் கூப்பிட்டேன். 'வரமுடியாது', ரெண்டு பேரும் ஒரே மாதிரி மறுத்தனர்.

சண்டையில்கூட ஒற்றுமை!

''பிரச்னை என்னனு சொன்னால்தானே தீர்க்க முடியும்?'' என்று கேட்டேன்.

'இல்லை! பேசாமலிருப்பதே நல்லது.' அம்மா பற்கடித்து பேசினாள்.

இருவரும் மௌனம் காக்க, டென்ஷனானேன்.

''என்னை ஏன் வதைக்கறீங்க? என்ன சண்டைனு சொல்லுங்களேன்!'' என்று கத்தினேன்.

''சரி, கேட்டுத் தொலையுங்க. அது உங்க தலையெழுத்து. என்னை என் மாமியாரே, 'சமத்து மருமக. நல்லா என்னைப் போல் சமைக்கறா. என்னை மாதிரியே கோயில் குளம்னு சுத்தறா... எப்படிப் பிடிச்சேன்னு தெரியலை! என் டேஸ்ட், ஸ்டைல் எல்லாம் என் மருமகளுக்கும் அப்படியே இருக்குது'னு எல்லாரிடமும் பெருமை பேசினாங்க. என் வாரிசு இவதான்னு பெருமை படுத்திக்கிட்டாங்க!''

''ரொம்ப சந்தோஷமான விஷயம் தானே!''

''எல்லா விஷயத்திலும் உங்களைப் போலவே இருக்கலாமான்னு கேட்டேன்

# அதிர்ச்சி வைத்தியம்



அவங்ககிட்டே...''

''அப்படின்னா, உங்க மாமியாரை முதியோர் இல்லத்தில் சேர்த்து, திரும்பிக் கூடப் பாக்காம இருக்கீங்களே, அது மாதிரி நானும் செய்யவா?''ன்னு கேட்டேன்.

''அடிப்பாவி! கேட்கக்கூடிய கேள்வி யாடி இது?'' பதைபதைத்தேன்.

''இதுக்குப் போயா கோவிச்சுக்கு வாங்க?'' ஒன்றுமறியாததுபோல் ஹேமா கேட்க,

''மனுஷ ஜென்மமா இருந்தால் கோபம்தான் வரும். ஏதோ என் அதிர்ஷ் டம், எங்கம்மா அடிக்காம விட்டாங்க'' என்றேன்.

கொஞ்ச நேரம் மௌனமாயிருந்து விட்டு, மறுபடி பேசினாள் ஹேமா, கண்களில் நீர் கசிய.

''பாவம்ங்க உங்க பாட்டி! ரொம்ப நல்லவங்க! ரொம்ப ஆசாரம். ரொம்ப பக்தி! அவங்க பழைய பஞ்சாங்கம். சரிப்பட்டு வரமாட்டாங்கன்னு முதியோர் இல்லத்தில் உங்கம்மா சேத்துட்டாங்க. போன வாரம் போய்ப் பார்த்தேன். நல்ல காய்ச்சல். டாக்டரிடம் மருந்து வாங்கிக் கொடுத்து, ஊசி போடச் சொல்லிட்டு வந்திருக்கேன். எப்படியும் உங்க பாட்டியை நம்ம வீட்டுக்குக் கூட்டி வந்துடணுங்க'' என்றாள் ஹேமா.

'ஆனா, அம்மா ஒத்துக்கணுமே! மாமி யாரை அம்மாவுக்குச் சுத்தமா பிடிக்காதே! என்ன செய்யறது?'

தவித்தேன்.

''பார்க்கலாம்'' என்றேன்.

ஹேமா கொடுத்த டோஸில் அம்மா ரெண்டு நாள் மறுபடி பேசாமல் இருந் தாள்.

மூன்றாம் நாள் காலையில் கார் வந்து வீட்டு வாசலில் நிற்க, அதிலிருந்து என் பாட்டியும், அம்மாவும் சிரித்தபடி வீட்டுக் குள் வந்துகொண்டிருந்தனர்! ●

# உருவாகின்றன ஒலிம்பிக்

“எனக்கு ஓட்டம்னா ரொம்பப் பிடிக்கும். அம்மாவும் அப்பாவும் விவசாயக் கூலிங்க. ஒண்ணாவது படிக்க ஆரம்பிச்சதுலேர்ந்து ஓடத் தொடங்கிவேன். எதிர்திசைக் காத்து கன்னத்துல மோதும். கண்டுக்காம ஓடுவேன். பன்னெண்டு வயசுக்குள்ள நூறு மீட்டர் ஓட்டப் பந்தயத்துல, திருச்சி மாவட்ட அளவுல நான்தான் ஃபர்ஸ்ட் வந்தேன். இந்திய அளவுல ஓடணும். ஏசியன் கேம்ஸ்ல கலந்துக்கணும். அப்புறமா ஒலிம்பிக்ல ஓடி, பதக்கம் ஜெயிக்கணும்!'' என்று கண்களில் கனவுகள் விரியப் பேசுகிறார் மகாலெட்சுமி.

திருச்சி மாவட்டம், மணச்சநல்லூர் அருகே உளுந்தங்குடி கிராமத்தில், எட்டாம் வகுப்பு படிக்கிறார் மகாலெட்சுமி. இவரைப்போல விளையாட்டின் ஒவ்வொரு துறையிலும் ஆர்வம் அதிகமுள்ள மாணவ, மாணவிகள் நிறைந்துள்ளனர் உளுந்தங்குடி கிராமத்தில்.

“பாலிடெக்னிக்ல படிச்சிட்டு வர்றேன். ஜூடோதான் என்னோட விளையாட்டு. எனக்குச் சரியான கோச் இல்லை; ஸ்பான்சரும் இல்லை. எனக்குள்ளே நம்பிக்கை மட்டும் நிறைய இருக்கு. அந்த நம்பிக்கைதான், ஜூடோவுல ஆறு வருஷமா மாநில அளவுல என்னை சேம்பியனா நிலை நிறுத்தியிருக்கு!'' எனக் கூறுகிறார் ராஜேஷ்.

''ரன்னிங், ஹைஜம்ப், கபடின்னு எனக்கு எல்லாத்துலயும் ரொம்ப ஆர்வம். ஆனா, எங்க ஊர்ல அதுக்கான திடல் இல்லை. அதுக்குனு ஆர்வத்தை அடக்கிக்க முடியல. இருக்கற இடத்துல ஒவ்வொரு விளையாட்டா மாறி மாறி விளையாடிக்குவோம். இப்பத்தான் நாலஞ்சு மாசமா எங்க ஊர்ல இந்த 'ரூரல் ஒலிம்பிக் சிட்டி' அமைப்பு வந்து மாற்றங்களை ஏற்படுத்தியிருக்கு!'' எனச் சொல்கிறார் ஒன்பதாம் வகுப்பு படிக்கும் ஜெகதீஸ்வரி.

நேஷனல் ஸ்போர்ட்ஸ் ஃபவுண்டேஷன் அமைப்பின் சீரிய திட்டமே, 'கிராமிய ஒலிம்பிக் நகரம்'.

''தமிழ்நாட்டில் இதன் மாவட்ட அமைப்பாளர்களில் முதல் பெண் நான். ஒவ்வொரு கிராமத்திலும் சர்வே எடுத்தோம். இளம் சிறுமிகளிடையே விளையாட்டின்மீது, மிகுந்த ஆர்வமிருப்பது அப்போதுதான் தெரியவந்தது!'' என்கிறார்



# கிராமங்கள்!



★ மகாலெட்சுமி

திருச்சி மாவட்ட கிராமிய ஒலிம்பிக் நகர மாவட்ட அமைப்பாளராக இயங்கி வரும் உமாராணி. இவர் அடிப்படையில் ஜூடோ விளையாட்டு வீராங்கனை.

"**மா**வட்ட அளவுல ஒவ்வொரு பிளாக்ல இருக்கற ஒவ்வொரு கிராமத்துக்கும் நேர்ல போறோம். பள்ளி மாணவ, மாணவிகள் மத்தியில் விளையாட்டின் முக்கியத்துவத்தைச் சொல்றோம். ஆர்வமுள்ளவர்களை அடையாளம் காண்கிறோம். விளையாட்டுவாரியாக அவர்களை வரிசைப்படுத்தி, ஒவ்வொரு விளையாட்டுக்கும் தனித்தனியே பயிற்சி அளிக்கிறோம். நேஷனல் ஸ்போர்ட்ஸ் ஃபவுண்டேஷன் அமைப்பு சார்பாக, விளையாட்டு உபகரணங்களைப் பெற்றுத் தருகிறோம். சில சமயங்களில் பணத் தட்டுப்பாடு ஏற்படும்போது, அந்தந்தப் பகுதியில் ஸ்பான்சர்கள் வாயிலாகவும் விளையாட்டு உபகரணங்கள் வாங்கித் தருகிறோம்!" எனக் கூறுகிறார் திருச்சி மாவட்ட கிராமிய ஒலிம்பிக் நகர அமைப்பாளராகச் செயல்பட்டு வரும் பிச்சைமுத்து சேகர்.

★ பிச்சைமுத்து சேகர்



★ உமாராணி



"**கி**ராமிய ஒலிம்பிக் நகரம் எனப்படும் திட்டம், தமிழ்நாட்டில் பதினேழு மாவட்டங்களில் துவங்கிச் செயல்பட்டு வருகிறது. மீதமுள்ள மாவட்டங்களுக்கும் இத்திட்டம் பரவலாக்கப்பட இருக்கிறது. கிராமங்களில் மறைந்து கிடக்கும் விளையாட்டு வீரர் மற்றும் வீராங்கனைகளை அடையாளம் கண்டு, அவர்களுக்கு முறைப்படி பயிற்சி அளித்து வருகிறோம். 2010ஆம் ஆண்டு ஏசியன் கேம்ஸிலும், 2012ஆம் ஆண்டு ஒலிம்பிக்கிலும் தமிழக கிராமங்களிலிருந்து கிளம்பிச் செல்பவர்கள், முத்திரை பதித்துப் பதக்கங்கள் வென்றுவர வேண்டுமென்பதே எங்களது முக்கிய குறிக்கோள்!" எனச் சொல்கிறார், கிராமிய ஒலிம்பிக் நகரத் திட்டத்தின் சேர்மன் செல்வம்.



**செய்திச் சித்திரம் :**

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**காதைக் கிழிக்கும் சத்தம் ஏதுமில்லை! கரும்புகை கக்குவதில்லை! பெட்ரோல் செலவு இல்லவே இல்லை!**

'பூவி வெப்பத்தைக் கட்டுப்படுத்து வோம்!' என்ற குரல், உலகம் முழுதும் ஒலித்துக்கொண்டிருக்கும் இன்றைய காலத் துக்கேற்பவும், சுற்றுச்சூழலுக்கு மாசு விளைவிக்கும் வாகனங்களுக்கு மாற்றா கவும், வலம் வருகின்றன பேட்டரியில் இயங்கும் இரு சக்கர வாகனங்கள்!

'எல்-ஷர்' என்று மானின் பெயரைத் தாங்கி விரையும் இந்த வாகனத்தை ஓட்டியபடி வந்திறங்கிய இராஜன் என்ப வர் விளக்கினார்: ''முன்னே வைச்சிருந்த வண்டிக்கும் இந்த வண்டிக்கும் பார்த்தா, எனக்கு பெட்ரோல் செலவு மொத்தமும் மிச்சம்! மாசத்துக்குச் சுமார் 1500 ரூபாய் மிச்சமாகுது. ஒரு நாளைக்கு பேட்டரி சார்ஜ் பண்ணினோம்னா 50 கி.மீ. வரைக்கும் ஓடுது! ஒரு கி.மீ.க்கு 10 காசுதான் செலவு! மேலும், பெட்ரோல் விலை ஏற்றத்தைப் பத்திக் கவலையே கிடையாது.

எனக்குக் கொஞ்சம் சமுதாய அக்க றையும் இருக்குங்க!'' எனச் சிரிக்கும் இராஜன், ''இந்த வண்டியிலே சுற்றுச் சூழலைக் கெடுக்கும் மாசுப்புகை கிடை யாது. டர்புர்ன்னு சத்தம் ஏதும் கிடையாது! சுற்றுச்சூழல் கெடுறதுக்கு பெட்ரோல், டீசல் வண்டிகளோட பெருக் கமும் ஒரு முக்கிய காரணம். அந்த வகையிலே, சுற்றுச்சூழலைக் கெடுக் கறதில என் பங்கு ஏதும் இல்லேன்னு நெனைச்சு ரொம் பவே பெருமைப்படறேன்!'' என்கிறார்.

# விரைந்தோடும்



மணிக்கு 40 முதல் 50 கி.மீ. வேகத்தில் செல்கிற இந்த இரு சக்கர வாகனங்கள், பெண்கள் கையாள் வதற்கு ஏற்ற வகையில், எடை குறைவாகவும் அழகிய வடி வமைப்பு கொண்டதாகவும் இருக்கிறது.

இன்னொரு சிறப்பம்சம் என்ன வென்றால், இத னைப் பயன்படுத்த லைசென்ஸ்

தேவையில்லை. பேட்டரியில் இயங்கும் 'எல்-மர்' சைக்கிள்களும் உண்டு.

''இந்த பேட்டரி வண்டிகள், பெட்ரோல் வண்டிகளுக்கு நிரந்தர மாற்றாக அமைவது சாத்தியம்தானா? இதன் சாதக-பாதகம் என்ன?'' என்ற கேள்விக்கு டெக்னிக்கல் மெக்கானிக் பி.சி. செல்வம் பதிலளித்தார்.

''சுற்றுச்சூழலையும் குடும்ப பட்ஜெட்டையும் நினைக்கும்போது, இந்த ரக வாகனங்கள் ஒரு வரப் பிரசாதம்தான்! ஆனாலும், இப்போதைக்கு இந்த வாகனங்கள்ல சில குறைபாடுகள் இருக்கின்றன. ஒரு நாளைக்கு சுமார் 50 கி.மீ. தூரத்துக்கு மேலே போக முடியாது! ஆறு



# மின் - மான்கள்!

அல்லது ஏழு மணி நேரத்துக்குப் பிறகு, ரீசார்ஜ் செய்து கொள்ளக்கூடிய ஆட்டோமேடிக் டைனமோ பொருத்தறதுக்கு ஏற்பாடு செஞ்சா நல்லது!

அதேபோல, அவசரமா போறதுக்கும் இந்த வண்டி ஆகாது. மணிக்கு நாற்பது கி.மீ. வேகம்தான் போகும். டபுள்ஸ், லோடு அடிக்கிற மாதிரி ஹெவி சி.சி.யும் அவ்வளவா இல்லை! வண்டியோட உதிரி பாகங்கள் கடைகள்ல கிடைச்சாலும், முக்கியமான பேட்டரிகள் எல்லா இடங்கள்லயும் கிடைக்காது. இதுபோல சின்னச் சின்னச் சிக்கல்கள் இருந்தாலும், உள்ளூரிலே ஆஃபீஸ் போயிட்டு வர்றவங்களுக்கு இதுதாங்க ஏத்த வண்டி!'' என்று சிரிக்கிறார் செல்வம்.



* பி.சி. செல்வம்

எதிர்கால இயந்திரமய வாழ்க்கையில், சுற்றுச்சூழலைக் கருத்தில் கொண்ட வாகனங்கள்தான் வலம் வரப்போகின்றன என்பதற்கு பிள்ளையார் சுழியே இந்த 'மின்-மான்கள்!'

- எம்.ஆர்.இராஜேந்திரன்



''ஆபரேஷனுக்கான பணத்தை, கோவில் உண்டியல்ல போடறீங்களே ஏன்?''

''நீங்கதானே டாக்டர் உயிர் பிழைக்கிறது, 'கடவுள்' கையில இருக்குன்னு சொன்னீங்க!''

- வி.சகிதா முருகன்

## ஜாலி ஸ்டோர்ஸ்

ருசியான உணவு வழங்காத
அரசு அதிகாரிகளை சஸ்பெண்ட்
செய்தார் லாலுபிரசாத் யாதவ் - செய்தி



இதுபோன்று இன்னும் எவற்றுக்கெல்லாம் அமைச்சர்கள் அலுவலர்களை சஸ்பெண்ட் செய்வார்கள்?

- அமைச்சரின் பேரக் குழந்தைக்குப் பேய் கதை சொல்லாத கல்வித்துறை அதிகாரி சஸ்பெண்ட்
- சொத்தையான காய்கறிகள் வாங்கி வந்த போலீஸ்காரர் தண்ணியில்லாத காட்டுக்கு மாற்றம்.
- அமைச்சர் தலையில் உச்சாபோன காக்கையைப் பிடிக்காத அதிகாரிக்கு கல்தா.
- டென்னிஸ் விளையாடும் அமைச்சரின் பேத்திக்கு பந்து பொறுக்கிப் போடாத அதிகாரி டிஸ்மிஸ்...
- அமைச்சர் சொன்ன ஜோக்குக்குத் தாமதமாகச் சிரித்த அதிகாரி மாற்றம்...
- அமைச்சரின் பேரன் பொம்மை துப்பாக்கியால் சுட, குண்டடிபட்டு விழுவதுபோல் நடிக்காத அமைச்சரின் பி.ஏ. சஸ்பெண்ட்.
- வெற்றிலைக்குச் சரியான அளவு சுண்ணாம்பு தடவாத சுகாதாரத்துறை அதிகாரி மாற்றம்.
- அமைச்சர் வீட்டு நாய்க்குட்டிக்கு அழகாக சிகை அலங்காரம் செய்யாத மகளிர் அணித் தலைவி நீக்கப்பட்டார்.
- இலவச திருமண விழாவில், தன்னையும் ஒரு பெண்ணுக்குத் தாலிகட்டச் சொல்லி வற்புறுத்தாத சமூகநலத்துறை அதிகாரி நீக்கம்.
- அமைச்சரைச் சுற்றிச் சுற்றி வந்து கடித்த கொசுவை அடிக்காத நகராட்சி அதிகாரி டிஸ்மிஸ்.
- சினிமா தியேட்டரில், குத்தாட்டம் போடப் போவதாகக் கூறிய அமைச்சரின் ஆர்வத்துக்குத் தடைபோட்ட ஆலோசகர் சஸ்பெண்ட்.
- மரம் நடும் விழாவுக்கு அழைத்து விட்டு, அமைச்சரின் கையில் மரத்துக்குப் பதில் செடியைக் கொடுத்த, வனப் பாதுகாப்பு அதிகாரி நீக்கம்.
- அமைச்சரின் மீசைக்கு நெய்போட்டு நீவிவிடாத பாதுகாப்பு அதிகாரி மாற்றம்.
- அமைச்சருக்கு, பிசிறில்லாமல் விசிலடிக்கக் கற்றுத்தராத இயல் இசை நாடக மன்றத் தலைவர் நீக்கம்!

# காக்கை உச்சா... அதிகாரிக்குக் கல்தா..!

**உத்தமபுத்திரன்**

# எதிர்மறைகள்

**சுஜாதா**



நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் ஆயிரத்து நூறு பாடல்கள் உள்ளன. திவ்ய பிரபந்தத்தின், நான்காவது ஆயிரமாக இதை வைப்பார்கள். வேதங்களுள் ஒப்புயர்வற்றதான சாமவேதத்தின் சாரம் என்றும் இதைச் சொல்வார்கள்.

திருவாய்மொழியில் எந்தப் பாடலை எடுத்துப் பார்த்தாலும், நம்மாழ்வாரின் புலமையும் கவிதை நயமும் புலப்படும். என் பொழுது போக்குகளில் ஒன்று திருவாய்மொழி புத்தகத்தில், ஏதாவது ஒரு பக்கத்தைத் திறந்து வைத்து, ஏதாவது ஒரு பாசுரத்தைப் படிப்பது. தவறாமல் அந்தப் பாடல் என்னை வியப்பில் ஆழ்த்தும்.

நம்மாழ்வாரின் பாடல்களில் அடிக்கடி வரும் கருத்துகள் இரண்டு. விஷ்ணுவே நான்முகனாகவும் சிவனாகவும் இருக்கிறான் என்பது ஒன்று; மற்றொரு கருத்து, எதிர்மறைகளைப் பட்டியலிட்டு எதிரெதிர் ரூபங்களும் அவனே என்று சொல்வது.

உதாரணமாக, கீழ்க்கண்ட பாடலைப் பாருங்கள்:

> **'நல்குரவும், செல்வும், நரகும், சுவர்க்கமும் ஆய்,**
> **வெல்பகையும், நட்பும், விடமும், அமுதமும் ஆய்,**
> **பல் வகையும் பரந்த பெருமான் என்னை ஆள்வானை,**
> **செல்வம் மல்கு குடித் திருவிண்ணகர்க் கண்டேனே.'**

நல்குரவு என்றால் வறுமை. வறுமையும் - செல்வமும்; நரகமும் - சொர்க்கமும், நட்பும் - பகையும், விஷமும் - அமுதமும்... இப்படிப் பலவகையிலும் பரந்த பெருமானை, செல்வம் செழிக்கும் திருவிண்ணகரில் கண்டேன் என்கிறார். இன்றைய ஒப்பிலியப்பன் கோயில், ஆழ்வாரின் காலத்தில் திருவிண்ணகர் என்ற பெயர் பெற்றிருந்தது. ஆழ்வார் தொடர்ந்து இன்பம் - துன்பம், கலக்கம் - தெளிவு, கொடுமை - இரக்கம், நெருப்பு - நிழல், நகரம் - நாடு, ஞானம் - மூடம், சுடர் - இருள், நிலம் - வானம், புண்ணியம் - பாவம், புணர்ச்சி - பிரிவு, எண்ணம் - மறதி, உள்ளது - இல்லாதது, எல்லாமே கண்ணன்தான் என்கிறார்.

உலகின் அத்தனை நன்மை தீமைகளுக்கும், சர்வேசுவரனான நாராயணனே காரணன் என்கிற கருத்தை எதிர்ப்பது மிகமிகக் கடினம். இருக்கிறான் என்றால் இருக்கிறான்; இல்லை என்றால் அவன் இல்லை என்ற புரட்சிகரமான கருத்தைச் சொல்கிறார். **'உளன் என அலன் என இவை குணமுடைமையில் உளன் இரு தகைமையோடு'** என்று சொல்கையில், இருப்பது இல்லாதது இரண்டு தன்மைகளிலும் அவன் இருக்கிறானாம்! யோசித்துப் பாருங்கள், தலை சுற்றும்.

(படிக்கலாம்)

## சோற்றானிகரை ஸ்ரீ தேவி பகவதியின் "நம்பூதிரி ஜோதிஷம்"



# "சக்தி இல்லையேல் எதுவுமேயில்லை"



ஸ்ரீ தேவி பகவதியின் துணை கொண்டு - சகல கார்ய சித்தி - வசீகரம் - தேவ பிரசன்னம் - வியாபார வசியம் - துர் சக்தி சம்காரம் - செய்வினை கோளாறுகளை விலக்கிடுதல் - பௌர்ணமியில் மனநிலை சரியில்லாதவர்களுக்கு ஸ்ரீ தன்வந்ரி ஹோமம் - அம்மாவாசையில் சத்ரு தொல்லை நீங்க மிளகாய் ஹோமம் - சகல கிரக தோஷ பரிகாரங்கள் காணாமல் போன பொருட்கள் பற்றி அறிவித்தல் - பெற்றோர்களுக்கு பிள்ளைகளை வசப்படுத்துதல் - செவ்வாய் - சர்ப்பதோஷ பித்ரு தோஷ (திலஹோமம்) பரிகாரங்கள் அனைத்தும் செய்து தரப்படும்.

முன் அனுமதியுடன் கூடிய கடித - நேரிடை தொடர்பிற்கு: **"ஸ்ரீ சாஸ்தா ஜோதிஷாலாயா"**
140/45, சுப்ரமண்ய முதலி தெரு, சைதாப்பேட்டை, சென்னை-15.

**Phones: +91-044-65171890, (0)98401 02001 / (0)98849 43309**
**Visit: www.namboodrijothisham.com**

குறிப்பு: வெளியூர் அன்பர்கள் ஜாதக நகலுடன் /தங்களுடைய பிரச்சனைகளை தெளிவாக எழுதி, ரூபாய் 500-க்கான D.D./M.O. -வுடன் கடித தொடர்பு கொள்ளவும்.

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

*அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்*
*ஸ்ரீ கோவிந்த தீக்ஷித புண்யஸ்மரண ஸமிதி* (Regd.)
"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"
29-30, East Iyen Street, KUMBAKONAM, Thanjavur Dt. Tamil Nadu -612 001. India.
E-mail : vedagdps@sancharnet.in Website : www.rajapatasala.in

☎ Off: (0435)
2425948
2401789
Patasala :
2401788
2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 466 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இம்மி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 19 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 700/- | Rs. 6,000/- |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 2,000/- | Rs. 25,000/- |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs.1,30,000/- |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D/ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

ப்ரிஸ்கிரிப்ஷன்

தூக்கமில்லையா..?
சர்க்கரையின் அளவு

# தூக்கம் கண்களைத் தழுவட்டுமே!

*எனக்கு வயது நாற்பது. கொஞ்ச நாட்களாகச் சரியாகத் தூக்கம் வருவதில்லை. தினமும் அரைமணி நேரத் தூக்கம்கூட இல்லை. என்ன செய்வதென்று புரியவில்லை. அப்படியே விட்டுவிட்டால் சரியாகிவிடுமா?*

- கோமதி, திருநெல்வேலி

மனநல மருத்துவர் டாக்டர் ரங்கராஜன் : முதலில், பகலில் தூங்காதீர்கள். தினமும் மாலை, இரவு வேளைகளிலாவது காஃபி, சிகரெட், மது போன்றவற்றைத் தவிர்த்துவிடுங்கள்.

இரவு உணவில் எண்ணெய் அதிகம் கலந்திருக்கக் கூடாது. தினமும் மிதமான உடற்பயிற்சி செய்யுங்கள். மாலையிலோ, படுப்பதற்கு முன்பாகவோ குளித்துவிட்டு, வியர்வையின்றிப் படுங்கள். அப்போது மறக்காமல் பழைய உடைகளை மாற்றிக் கொள்ளுங்கள்.

தூக்கம் வருவதற்கு முன் படுத்துக் கொள்ளவேண்டாம். படுக்கைக்கருகே ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு ஏதையாவது படியுங்கள். தூக்கம் கண்ணைச் சுழற்றும்போது, புத்தகத்தை மூடிவிட்டுப் படுத்துக்கொள்ளுங்கள்.

படுக்கச் செல்வதற்கு முன் கொஞ்சம் பால் குடிக்கலாம்.



படுக்கையறையில் தொலைக்காட்சி, மின்விளக்கு போன்றவற்றை நீங்கள் தூங்கச் செல்லும்போது ஆன் செய்ய வேண்டாம்.

இவ்வளவுக்குப் பிறகும், ஒரு வாரத்துக்கும் மேலாகத்



தூக்கமின்மை தொடர்ந்தால் மருத்துவரைப் பார்ப்பது நல்லது. ஏனென்றால், தினமும் ஆறரை மணி நேரமாவது தூங்காவிட்டால் வேலையில் கவனம் இருக்காது. பகலில் ஒருவித மயக்க நிலை இருக்கும். உடலில் வேறுவித பாதிப்புகள் நேரலாம்.

ஏதாவது குறிப்பிட்ட பிரச்னையை, மனத்தில் மீண்டும் மீண்டும் ஓட விடுவதன் காரணமாகத் தூக்கம் வரவில்லையென்றால், அந்தப் பிரச்னையைக் களைவதற்கான வழியைத் தேடுங்கள். அடுத்த மாதம் பதவி உயர்வு கிடைக்குமோ கிடைக்காதோ என்கிற கவலை வாட்டினால், அதற்கான நேர்முகத் தேர்வில் எப்படிப் பதில் அளிப்பது என்று பயிற்சி எடுத்துக்கொள்ளுங்கள். தன்னம்பிக்கை வளரும்போது டென்ஷன் மறையும். தூக்கம் தானாக வந்து சேரும்.

## இரத்தத்தில் அதிகமாக இருக்கலாம்!

ஆனால், எந்தவித மனச்சோர்வும் இல்லாமலேயே தூக்கம் தொடர்ந்து வராமல் இருந்தால், உங்கள் குடும்ப மருத்துவரிடம் ஆலோசனை பெறுங்கள். இரத்த அழுத்தம், இரத்தத்தில் உள்ள சர்க்கரையின் அளவு ஆகியவற்றை பரிசோதனை செய்யவேண்டியிருக்கலாம்.

ஸ்பெஷலிஸ்டைத்தான் அணுக வேண்டும் என்றால், நரம்பியல் மருத்துவர் அல்லது ஈ.என்.டி. (காது - மூக்கு - தொண்டை ) மருத்துவரை நாடலாம். ஏனென்றால், இந்தப் பாகங்களில் ஏற்பட்டிருக்கக்கூடிய பாதிப்பு காரணமாக, தூக்கம் வராமல் இருக்கலாம். தவிர, தூக்கக் குறைபாடுகளுக்காகவே தனியான ஒரு மருத்துவத் துறையும் அறிமுகமாகி விட்டது. அது தொடர்பான மருத்துவர்களையும் அணுகலாம்.

**- ஜி.எஸ்.எஸ்.**

# கல்கி செய்த உதவி!

**கா**லத்துக்கும் கவனத்தில் வைக்க வேண்டிய 'காலம் அழியேல்' கருத்துரை கல்கி காலத்தால் செய்த உதவி!

**- சி.என்.ரமாதேவி**

"**நா**ம், பிரச்னையைவிடப் பெரியவர்கள் ஆகிவிட வேண்டும்..." என்று சேவாலய முரளிதரன் கூறிய ஆழ்ந்த கருத்துகள் தைரியம் ஊட்டுகின்றன.

**- ரங்கமணி கிருஷ்ணஸ்வாமி**

**இ**ன்றைய இளைஞர்களுக்குச் சிறந்த வழிகாட்டித் தொடர் 'வையத் தலைமை கொள்'.

**- என்.பாலகிருஷ்ணன்**

'**பா**தை போட்ட பாதிக் கவிதை' (சேவாலயா முரளிதரன்), அரிய விஷயங்களையும், விளக்கியுள்ள பாங்கு பாராட்டுதலுக்குரியது!

**- ஆர்.வி.கிருஷ்ணமூர்த்தி**

**எ**ல்லா வயதினருக்கும் பொருந்தும் 'தடைகளைத் தகர்த்தெறி' படித்தால் வாழ்க்கையில் முன்னேறிவிடலாம் என்பதில் சந்தேகமே இல்லை!

**- பிருந்தா இரமணி**



**கா**ந்தி கைப்பட எழுதிய தமிழ்க் கடிதம் கண்டு உள்ளம் எல்லாம் உவகை.

**- லெமூரியன்**

**எஸ்.பி.முத்துராமன்**




# ரஜினிக்கு எதிராக

மிகவும் மாறுபட்ட ஒரு புலனாய்வுப் பத்திரிகையாளராக ரஜினி நடித்த 'கழுகு' படம் எதிர்பார்த்தாற்போல வெற்றி பெறவில்லையே, அதற்கு என்ன காரணம் என்று யோசித்தபோது, சில விஷயங்கள் புரிந்தன. அனைத்து வசதிகளும் கொண்ட 'கேரவன்' என்பது, இன்று மக்களுக்குத் தெரிந்த ஒன்றாக இருக்கலாம். ஆனால், இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு, எல்லா வசதிகளையும் கொண்ட ஒரு பஸ் இருக்க முடியும் என்பது, ரசிகர்களால் நம்பமுடியாத ஒரு விஷயமாக இருந்தது. அந்தப் பஸ்ஸிலேயே க்ளைமாக்ஸ், அதை வில்லன் ஆட்கள் உடைப்பது, போன்று பின்னப்பட்ட காட்சிகள் எதிர்பார்த்த அளவு ரசிக்கப்படவில்லை.

இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னால், ரஜினி ஏற்று நடித்த இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிஸ்ட் ரோல்கூட ரசிகர்களுக்குச் சற்று பரிச்சயமில்லாத ஒன்றுதான். ஆனால்,

இன்றைக்கு அந்தக் கதையைப் படமாக எடுத்திருந்தால், வெற்றி பெற்றிருக்கும் என்றுதான் நினைக்கிறேன்.



**கா**ரைக்குடியில், கண்ணையா தையல் கடையில், காஜா எடுக்கும் வேலை பார்த்துக்கொண்டிருந்த சிறுவனுக்கு, திராவிட இயக்கத்தின்பால் மிகுந்த பற்று இருப்பதையும், அதன் காரணமாக அந்தச் சிறுவன் திராவிட இயக்கப் பத்திரிகைகளை ஆர்வத்துடன் படிப்பதையும் கண்டறிந்தார், என்னுடைய தந்தையார் இராம. சுப்பையா. உடனே, அந்தச் சிறுவனுக்கு ஏராளமான திராவிட இயக்கப் பத்திரிகைகளைக் கொடுத்து, படிக்க வைத்து, அந்தச் சிறுவன் பிற்காலத்தில் திராவிட இயக்கத்தில் தீவிரமாகத் தன்னை ஈடுபடுத்திக்கொள்ள வழி செய்தார். அந்தச் சிறுவன் யார் தெரியுமா? இன்று அருளாளர் என்று அன்புடன் அனைவராலும் அழைக்கப்படும் திரு. ஆர்.எம்.வீரப்பன் அவர்கள்தான்! 'என்னை திராவிட இயக்கத்துக்குக் கை பிடித்து அழைத்துச் சென்ற ஆசான், இராம. சுப்பையாதான்' என்று அவர் குறிப்பிடுவார். அவரது அலுவலகத்துக்குச் சென்றால், எங் தந்தையாருடன் அவர் எடுத்துக்கொண்ட புகைப்படத்தை மாட்டி வைத்திருப்பதைக் காணலாம்.

அப்படிப்பட்ட ஆர்.எம்.வீ.யின் சத்யா மூவீஸ் சார்பில் ரஜினி நடிக்க ஒரு படத்தை எடுக்க முடிவு செய்து, அந்தப் படத்தை இயக்க எனக்கு வாய்ப்புக் கிடைத்தது மிகவும் பெருமைக்குரிய விஷயம். அந்தப் படம்தான் 'ராணுவ வீரன்'. எந்த விஷயத்திலும் தமக்கு முழு திருப்தி ஏற்படும்வரை விட மாட்டார் ஏவி.எம். அவர்கள். ஆர்.எம்.வீ.யிடமும் அந்தக் குணம் உண்டு என்பதால், அவரை நான் 'சின்ன ஏவி.எம்.' என்று சொல்வதுண்டு.

**ச**த்யா மூவிஸ் தயாரிக்கும் படங்களின் கதை விவாதங்களின்போது, ஆர்.எம்.வீ.யும் வந்து உட்கார்ந்து கொள்வார். ஏராளமான கேள்விகள் கேட்பார். அந்தக் கேள்விகளுக்குத் திருப்தியளிக்கும் வகையில் பதில்



# சிரஞ்சீவி!

கிடைக்கும் வரை விட மாட்டார். 'ராணுவ வீரன்' படம் எடுத்தபோது, அவர் தமிழகத்தின் அமைச்சரவையில் இடம் பெற்றிருந்தார். நான் முழுக்க மிகவும் பிஸி. எனவே, 'இரவு ஒன்பது மணிக்கு மேல், சத்யா மூவீஸ் அலுவலகத்துக்கு வந்துவிடுங்கள், நானும் என்னுடைய வேலைகளை எல்லாம் முடித்துவிட்டு, வந்துவிடுகிறேன்' என்று சொல்வார்.



• 'ராணுவ வீரன்' ரஜினி...

நாங்கள் ஒன்பது மணியிலிருந்து அவருக்காகக் காத்துக் கொண்டிருப்போம். அவர் தம் வேலைகளை யெல்லாம் முடித்துவிட்டு, டிஸ்கஷனுக்கு வருவதற்கு இரவு பன்னிரண்டு மணிகூட ஆவதுண்டு. அப்போதும் ஆர்வத்துடன் கதை விவாதத்தில் பங்கேற்பார்.

மக்களின் எந்த ஒரு பிரச்னைக்கும் தீவிரவாதம் ஒரு நிரந்தரமான தீர்வாக இருக்காது என்பதுதான் ராணுவ வீரன் படத்தின் மெசேஜ். ராணுவ வீரனான ரஜினிக்கு எதிரான தீவிரவாதி கதாபாத்திரத்தில், வித்தியாசமாக இருக்க வேண்டும் என்று தெலுங்கு நடிகர் சிரஞ்சீவியை அணுகினோம். ரஜினியுடன் சேர்ந்து நடிப்பதை அவரும் மிகவும் பெருமையாகக் கருதி உடனடியாக தமது சம்மதத்தைத் தெரிவித்தார். தீவிரவாதம் குறித்து வாதப்பிரதிவாதங்கள் நடைபெறும் காட்சிகளில், கூர்மையான வசனங்களால் தியேட்டரே கைத்தட்டலில் அதிரும். அதைப்போலவே, சண்டைக்காட்சிகளிலும், தங்கள் திறமையைக் காட்டினார்கள் இரண்டு சூப்பர் ஸ்டார்களும்.

சினிமாவில் நடனமாடிய ஒரு பெண்ணின் முகவெட்டையும் துறுதுறுப்பையும் பார்த்துவிட்டு, ஆர்.எம்.வீ.யின் ஆலோசனையின் பேரில் 'ராணுவ வீரன்' படத்தில், ஒரு பாத்திரத்தில் நடிக்க வாய்ப்பு கொடுத்தோம். அவர் பின்னர் சினிமாவில் கதாநாயகியாக பல படங்களில் நடித்துப் புகழ் பெற்று, இன்றைக்கு, சின்னத்திரை தொடர்களில் வெற்றிகரமாக வலம் வந்து கொண்டிருக்கிறார். அந்த நடிகை யார் என்று யூகித்திருப்பீர்களே...!

(பயணம் தொடரும்)

எழுத்து வடிவம்:
**எஸ்.சந்திரமௌலி**



## 'சிவாஜி' சுவாரஸ்யங்கள்

சிவாஜி திரைப்படம் உருவான போது நிகழ்ந்த பல பின்னணி சம பவங்களையும் தொகுத்து ''சிவாஜி' சிந்தனை முதல் செல்லுலாயிட் வரை' என்ற புத்தகமாக எழுதி இருக்கிறார் பத் திரிகையாளர் ராணி மைந்தன் (வெளி யீடு : கிழக்கு பதிப்பகம்). இந்தப் புத்த கத்துக்காக ஒரு ஸ்பெஷல் பேட்டி அளித்திருக்கிறார் ரஜினி.

''பல வருடங்களாக மீடியாவுக்குப் பேட்டி அளிக்காமல் இருந்த ரஜினியிடம், இந்தப் புத்தகத்தில் ரஜினி பேட்டி கட்டாயமாக இருக்க வேண்டும் என்று விருப்பம் தெரிவித்தபோது, உடனே ஒப்புக்கொண்டார். கறுப்பு வேட்டி; வெள்ளை ஜிப்பா என்று மிக சாதாரண உடையில் ராகவேந்திரா மண்டபத்துக்கு வந்த ரஜினி, சுமார் ஒரு மணி நேரம் வெகு சகஜமாக, ஒரு நீண்ட நாள் நண்ப ரைப் போலப் பேசிக்கொண்டிருந்தார்'' என்கிறார் ராணி மைந்தன். புத்தகத்துக் காக, டைரக்டர் ஷங்கர், ஒளிப்பதிவாளர் கே.வி.ஆனந்த், ஏ.ஆர்.ரஹ்மான் என்று அத்தனை பேரையும் தனித்தனியாகச் சந்தித்துப் பேசி, தகவல்களைத் திரட்டி யிருக்கிறார் ராணி மைந்தன்.

**- சி.எம்.**

காலையிலிருந்து எத்தனை தடவை இருமினேன். கண்டுக்கவே மாட்டேங்கறியே...?

462 தடவை இருமியிருக்கீங்க... நானும் எண்ணிக்கிட்டுத் தான் இருக்கேன்!

- ஆறுமுகம்

டேய், அம்மாவை எதிர்த்துப் பேச உனக்கு மட்டும் எப்படித் துணிச்சல் வந்தது?

உங்களை மாதிரி நானும் பயந்தாங்கொள்ளியா இருக்கணுமாப்பா?

- சாலைஅகரம் கா.சங்கர்

"ஆனாலும் புலவர் கொஞ்சம் ஓவராகப் புகழ்ந்து பாடிவிட்டார்."

"ஏன், அதனாலென்ன?"

"தன்னைக் கிண்டல் செய்கிறார் என்று எண்ணி, மன்னர் நன்றாக மொத்தி அனுப்பிட்டாரே!"

- சிக்ஸ்முகம்

# 462வது இருமல்!

ஏழாம் நம்பர் பேஷண்ட் 'அரண்டு' போயிருக்காரா, எப்படித் தெரிஞ்சது?

அவருக்கு 'டிஸ்சார்ஜ்'ன்னு சொன்னதுக்கு, அந்த 'சார்ஜ்'க்கு எவ்வளவு பணம் கட்டணும்னு கேக்கறாரே!

- வெ.சீதாராமன்

# மறந்துபோன அழுகை!



முத்துக்கருப்பு காலமாகிப்போன செய்தி, காலை ஒன்பது மணிக்கு வந்தது. சண்முகம் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். ஒன்பதரைக்குள் அலுவலகம் போயாக வேண்டும். அரவிந்த், தேர்வு முடிந்ததை இன்னமும் தூங்கிக் கொண்டாடிக் கொண்டிருந்தான்.

சரளாவுக்கு, பத்து நாளாய் ஜுரம். விட்டுவிட்டு வந்துகொண்டிருந்தது. வெவ்வேறு பெயர்களில்.

சண்முகத்துக்கு பத்தரை மணிக்கு, வெள்ளைக்காரர்களோடு ரொம்ப முக்கியமான ஒரு 'கான்ஃபரன்ஸ் கால்' இருக்கிறது. ஒரு மாதத்துக்கு முன்னே முடிவான விஷயம் அது. நாராயணமூர்த்தி இருந்தால் பார்த்துக்கொள்வான். புதுக் கல்யாண ஜோடி தேனிலவு போயிருக்கிறான்.

சரளா, அரவிந்தை எழுப்பிக்கொண்டிருந்தாள். அவன் நீளமாய் ஒரு கொட்டாவி விட்டு, ''ஊருக்கா... இன்னிக்கா... அப்ப என் பிக்னிக்...'' என்று அழுகைக்கான ஆரம்பக் கட்ட பிரயத்தனங்களோடு கேட்டான்.

''அங்க தாத்தா செத்துக்கிடக்காரு. இவரு பிக்னிக் போறாராம். பல்லைத் தேச்கட்டுச் சீக்கிரமா கிளம்பு.''

''செத்தே செத்துட்டாராப்பா...'' என்றான், சண்முகத்தைப் பார்த்து.

சண்முகம் வி.பியுடன் போனில் பேசிக் கொண்டிருந்தான்.

''என்னால புரிஞ்சுக்க முடியுது. ஆனா, சான்ஸே இல்லை சண்முகம். மீட்டிங் மொத்தமே பத்து நிமிஷம்தான் போகும் உனக்கே தெரியும். இது வெறும் ஃபார் மாலிட்டிதான். ஆனா, நீ இருக்கறதுங்கிறது ரொம்ப முக்கியம். ரெண்டு முறை 'யா' போட்டுட்டு, ஒரு 'கிரேட்' சொல்லிட்டுக் கிளம்பிடு. மிச்சத்தை நான் பாத்துக்கறேன்...''

சண்முகம், வழக்கம்போல் ஷூ, டை அணிந்துகொண்டு அலுவலகம் கிளம்பினான். பன்னிரண்டரை ரயிலில் போவதாக முடிவு செய்த சரளாவும் அரவிந்தும், ரயில் நிலையத்துக்கு நேராய்ப் போவதாகவும் சண்முகம் பின்னர் வந்து சேர்ந்துகொள்வதாகவும் பேசப்பட்டது.

விழுப்புரத்தில் வண்டி நின்றபோது, சாப்பிடுமாறு சரளா கட்டாயப்படுத்தினாள்.

''அங்க போனா, ராத்திரி வரைக்கும்

**''சண்முகம், நாற்பத்தஞ்சு கோடி கான்ட்ராக்ட் ஓ.கே. பண்ணிட்டான்யா வெள்ளைக்காரன். எல்லா க்ரெடிட்டும் உனக்குத்தான். அடுத்த வாரம் ஒரு கிராண்ட் பார்ட்டி...''**



சாப்பிட முடியாது.'' நிழலில் காய்ந்த ஈரத்துணி மாதிரி இருந்தது தோசை. சாப்பிடும்போது வி.பி. லைனில் வந்தார்.

''லீஸ் லைன் பத்தி என்னமோ கேக்கறான்யா... எனக்கு ஒரு எழவும் புரியல... நீயே பேசு...''

சரளா, ஒரு வாரப் பத்திரிகை வாங்கிக் கொண்டாள். அரவிந்த், தம் கையடக்க கருவியில் கண்ணிமைக்காமல் விளையாடிக்கொண்டிருந்தான்.

ஊர் வந்ததும் ரயிலை விட்டிறங்கி, ஒரு டாக்ஸி பேசி, வேகமாய்ப் போகச் சொன்னார்கள்.

அரவிந்த், சண்முகத்தின் காதுக்குள்,

''வெள்ளிக்கிழமை 'பிக்னிக்'பா... அதுக்குள்ள திரும்பிடலாமா?''

சண்முகம் முறைத்தான்.

''ப்ளீஸ்ப்பா...''

''அதெல்லாம் மறந்துடு... அடுத்த வருஷம் போகலாம்...'' என்றாள் சரளா.

''இன்னும் ஒரு வருஷம் என்னால 'வெயிட்' பண்ண முடியாது.''

அதன் பிறகு யாரும் பேசவில்லை.

**கா**ரை விட்டு இறங்குகையில் சித்தப்பா, தெரு முனையிலேயே நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

''உடனே எடுத்திரலாம் சண்முகம்... நாளைக்கு வரைக்கும் பிரேதம் தாங்காது...''

சண்முகம், தலையாட்டியவாறு முத்துக் கருப்பு கிடத்தப்பட்டிருந்த பெஞ்சை நோக்கிப் போனான். சித்தப்பா மறுபடி அவன் காதுக்குள் பேசினார்.

''சின்னவன் என்னமோ பேசணும்; முடிக்கணும்ங்கறான். நாளைக்குத்தான் எடுக்கணும்னு கத்திக்கிட்டிருக்கான். முடியாதுன்னு ஒரே வார்த்தையில சொல்லிடு...'' காடாய் வளர்ந்திருந்த வெண்மயிர்க் கூட்டத்துக்குள் முத்துக் கருப்புவின் முகமே மறைந்து புதைந்திருந்தது.

மொபைல் அலறியது. வி.பி!

''சண்முகம், நாற்பத்தஞ்சு கோடி கான்ட்ராக்ட் ஓ.கே பண்ணிட்டான்யா வெள்ளைக்காரன். எல்லா க்ரெடிட்டும் உனக்குத்தான். அடுத்த வாரம் ஒரு கிராண்ட் பார்ட்டி....'' என அவர் பேசிக் கொண்டே இருக்க, லோகு அழுக்கு வேட்டியை மடித்துக் கட்டியபடி சண்முகத்தை அணுகினான்.

**திருவையாறு பாலகுமார்**

The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956

**FORM IV**

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | Chennai |
| 2. Periodicity of Publication | : | Weekly |
| 3. Name of Printer<br>Nationality<br>Address | : | Lakshmi Natarajan<br>Indian<br>Old No. 36, New No 12,<br>4th Main Road,<br>Kasturba Nagar, Adyar,<br>Chennai - 600 020 |
| 4. Name of Publisher<br>Nationality<br>Address | : | Lakshmi Natarajan<br>Indian<br>Old No. 36, New No 12,<br>4th Main Road,<br>Kasturba Nagar, Adyar,<br>Chennai - 600 020 |
| 5. Name of Editor<br>Nationality<br>Address | : | Seetha Ravi<br>Indian<br>'Mangala Ganesh',<br>Second Floor,<br>15, IV Seaward Road,<br>Valmiki Nagar,<br>Thiruvanmiyur,<br>Chennai - 600 041 |

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total captial: **Bharathan Publications Private Limited, 47-NP., Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 032.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.2008

Lakshmi Natarajan
Publisher

''உன் சித்தப்பா என்ன சொல்றான்...?''

நன்றாய்க் குடித்திருக்கிறான். வாடை மூச்சை அடைத்தது.

''இன்னிக்கே எடுத்திடலாம்னு அபிப்ராயப்படறார்.''

''அவனுக்கென்ன... ஒரு நாள் கூத்து தானே... ஆடிட்டுப் போயிடலாம்னு பார்க்கிறானா... பேசி முடிவு பண்ணாம 'பாடி' நவுராது; சொல்லிட்டேன்...''

''என்ன பேசணும்கற?''

''நிலம் உனக்காம், பத்துக் காசு பெறாத இந்த வீடு எனக்காம். சாவுறதுக்கு முன்னாடி, இந்தக் கிழம் அந்தக் கிழத்துக்கிட்ட சொல்லியிருக்கு. நான் என்ன இளிச்சவாயனா'' என்றவாறு தள்ளாடினான்.

நழுவிய வேட்டியைப் பிடித்தவாறு, கோணலாய் நின்ற அவனைச் சமாதானம் செய்து, அந்தப் புறமாய்த் தள்ளிக்கொண்டு போனார்கள்.

நேரம் நழுவிப்போய்க்கொண்டே இருந்தது. லோகு மசிவதாய் இல்லை.

சித்தப்பா மறுபடி வந்தார்.

'''பாகப் பிரிவினையில அவனுக்கு என்ன வேணுமோ அதை அவன் எடுத்துக்கலாம். எனக்கு ஆட்சேபனை இல்லை'ன்னு ஒரு வார்த்தை சொல்லிருப்பா...''

சண்முகம் எழுந்தான்.

''வாயில சொல்றது காத்தோட போயிடும்... எனக்குச் சத்தியம் வேணும்...'' என்றான் லோகு.

சண்முகம் சத்தியம் செய்தான்.

ஏரியில் தண்ணீர் பிடித்து வந்து முத்துக் கருப்புவைக் குளிப்பாட்டி, பேரன்-பேத்திகள் நெய் பந்தம் பிடித்து, வழிவிட்டு காடு நோக்கிக் கிளம்ப பத்து மணிக்கு மேலாகி விட்டது.



**''நிலம் உனக்காம்; பத்துக் காசு பெறாத வீடு எனக்காம். சாவுறதுக்கு முன்னாடி, இந்தக் கிழம் அந்தக் கிழத்துக்கிட்ட சொல்லிருக்கு. நான் என்ன இளிச்சவாயனா''**

முத்துக்கருப்புவுக்கு எரியூட்டி விட்டு, தலைமுகம் மழித்துச் சில் லென்ற ஏரித் தண்ணீரில் மூழ்கிக் குளித்துவிட்டு, ஈரவேட்டியுடன் வீடு வந்து அப்பாவைக் கிடத்தியிருந்த பெஞ்சில் உட்கார்ந்தான் சண்முகம். அப்போதுதான் புலப்பட்டது நடந்த களேபரத்தில் தான் அழக்கூட மறந்தது.

ஏரித் தண்ணீரில் மூழ்கியதில், போதை தெளிந்தவனாய் லோகு, சண்முகத்தை கொஞ்சம் வெட்கத்துடன் பார்த்தவண்ணம் உட்கார்ந்திருந்தான். ●

# Up Above the World!

*- A New Science Serial!*



Mini GOKULAM

# Exams Made Easy!

*- A Special Booklet*

# Hungry Mallu!

*- Picture Story*



# GOKULAM

THE Magazine for Children

March 2008 Rs.10/- Only

கோடம்பாக்கம் என்றாலே பரபரப்பு, சர்ச்சை... இரண்டும் கூடவே பிறந்தவை! நடிகர்கள் ஒரு போட்டி பரபரப்பில்... நடிகைகளோ வேறு ஒரு சிக்கலில்... இசையமைப்பாளர்கள் 'ட்யூன்' மோசடி... என்று எதாவது ஒன்றில் மாட்டிக்கொண்டே இருப்பார்கள். இந்த வரிசையில் புதிதாக முளைத்துள்ளது பினாமி பாடலாசிரியர்கள் விவகாரம்.

'பொதுவாக அதிகமாகப் பாட்டெழுதும் கவிஞர்கள், தாங்களே பெரிய புரொடியூசர்கள், இயக்குநர்களுக்கு எழுதுகிறார்கள். உதவிக்கென்று வைத்திருப்பவர்களை பினாமியாக, சுமார் பட்ஜெட் படங்களுக்குப் பாட்டெழுதச் சொல்லி, அதில் சில திருத்தம் செய்து தங்கள் பெயரைப் போட்டுக்கொள்கிறார்கள்' என்பதுதான் அந்தக் குற்றச்சாட்டு.

இப்போது, பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் பாடலாசிரியர்களில் ஒருவர் மட்டுமே, மூன்று உதவி பாடலாசிரியர்களை வைத்துள்ளார். அந்த மூன்று உதவி பாடலாசிரியர்களுக்கும், ஒரு பாட்டுக்கு ஆயிரத்திலிருந்து இரண்டாயிரம் ரூபாய் வரை பாட்டின் தரத்தைப் பொறுத்துக் கொடுக்கப்படுகிறது; அது மட்டுமின்றி, அவர்கள் விரும்பும் மது, உணவு வகைகள் சப்ளை ஆகின்றன. இந்த அற்ப சந்தோஷத்தில் மயங்கிப்போய் அந்த உதவி பாடலாசிரியர்கள், இதைப் பற்றி யாரிடமும் வாய் திறக்காமல், இந்த 'வேலை'யைச் செய்து வருகிறார்கள். இதுதான் சினிமா பாடல் எழுத முற்படும் இளைஞர்களைப் பயமுறுத்தும் செய்தியாக வளைய வந்துகொண்டிருக்கிறது.



அப்துல் ரகுமான்

# பினாமி பாடலாசிரியர்கள்?

இப்படியொரு சம்பவம் கோடம்பாக்கத்தில் நடக்கிறதா என்பதை அறிய பிரபலமான நமது சினிமா பாடலாசிரியர்களைத் தொடர்பு கொண்டோம்.

நமது தொடர்பில் முதலில் வந்தவர் கவிஞர் யுகபாரதி. நாம் விஷயத்தைச் சொன்னதும், தார்மிகக் கோபத்துடன் யுகபாரதி வன்மையாக மறுத்தார். 'இப்படியொரு சம்பவம் நடக்குதுன்னு, உங்களுக்கு எப்படித் தெரியும். காற்று வாக்குல வந்த செய்தியைக் கேட்டுக்கிட்டு, உங்க இஷ்டத்துக்குக் கேள்வி கேட்காதீர்கள்'' என்றார்.

'பினாமி பாடலாசிரியர் விவகாரம் உண்மையா என்று மட்டும் சொல்லுங்கள்,

**உதவி பாடலாசிரியர்களுக்கு, ஒரு பாட்டுக்கு ஆயிரத்திலிருந்து இரண்டாயிரம் ரூபாய் வரை பாட்டின் தரத்தைப் பொறுத்துக் கொடுக்கப்படுகிறதாம்!**

என்றோம் விடாமல், ''எந்தக் கருத்தும் சொல்ல விரும்பல'' என்றார் உறுதியாக.

இது ஒருபுறம் இருக்க, சினிமாவில் பாட்டெழுத வந்து, வாய்ப்புக் கிடைக் காமல் பக்தி பாடல்கள், ஆல்பங்கள் போட்டுக்கொண்டிருக்கும் குளத்தூர் துளசிதாசன் என்பவரிடம் இது

# - கோடம்பாக்க ட்ராமா!

குறித்துக் கேட்டோம். ''நீங்க சொல்றது உண்மையாக இருப்பதற்கு அதிக வாய்ப்பு இருக்கு. நான் ஒரு மரபறிந்த கவிஞன். ஆனால், கடைசிவரை எனக்குக் பாட்டெழுத வாய்ப்பு கிடைக்கவில்லை'' என்றார். ஆனால், ''எனது நாட்டுப்புறப் பாடல்களிலிருந்து நிறைய திருடப் பட்டிருக்கிறது'' என்றார் ஆதங்கத்துடன்.



இசையமைப்பாளர் இமானிடம் இது குறித்துக் கேட்டோம்.

''எங்களுடைய வேலை, ட்யூன் போட்டு பாடலாசிரியர்களிடம் கொடுத்து விடுவது தான். இயக்குநர் காட்சியைச் சொல்லிவிடு வார். ட்யூனுக்குப் பாட்டு எழுதுவது என்பது பாடலாசிரியனின் தனிப்பட்ட ரகசியம். அவர் கொடுக்கும் பாடல் அவர்

எழுதினாரா? யாரோ எழுதினார்களா என்று எங்களுக்குத் தெரியாது; கேட்கும் வழக்கமும் இல்லை. எழுதிக்கொடுக்கும் பாடல் எங்களுக்குப் பிடித்திருந்தால் போதும்'' என்று தம் பேச்சை முடித்துக்கொண்டார் இமான்.

**பா**டலாசிரியர் தாமரையிடம் இது குறித்துக் கேட்டபோது, நமது கேள்வியைப் புரிந்துகொண்டு பேசினார். ''கிராமங்களிலிருந்து சென்னைக்குப் பாட்டெழுத புறப்பட்டு வரும் இளைஞர்களின் நிலைமை மிகவும் பரிதாபமானது. அவர்கள், தங்களுக்கு வாய்ப்புக் கிடைக்க வேண்டும் என்பதற்காக வஞ்சக மனம் கொண்டவர்களிடம் சிக்கி தங்கள் பாடல்களைக் கொடுத்துவிட்டு, அவர்களுக்கு எடுபிடியாக ஆகிவிடும் அவலம் எல்லாருக்கும் தெரிந்ததே! நான் பாடல் எழுதத் தொடங்கிய காலத்தில், நாலு பாடல்கள் காசில்லாமல் எழுதிக் கொடுத்துள்ளேன். அப்படியிருக்கும்போது, 'பினாமி' விவகாரம்கூட உண்மையாக இருந்தாலும் இருக்கலாம்'' என்றார்.



* டி.இமான்



* துளசிதாசன்

**இ**ன்று வைரமுத்துவுக்கு அடுத்தபடியாக முன்னணியில் இருக்கும் பாடலாசிரியர் நா.முத்துக்குமார். இவரிடம் இது குறித்துக் கேட்டபோது, நாம் கேள்வியை முடிக்கும் முன்பே குறுக்கிட்ட நா.முத்துக்குமார் :

''நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு எனக்குத் தெரியுது. வெளியூர்லேயிருந்து பாட்டெழுத வர்ற இளைஞர்கள், என்னைச் சந்திக்கிறது இல்லை; அவர்களைச் சந்திக்க எனக்கு நேரமும் இல்லை. நீங்க சொல்வதுபோல நான் எந்த உதவியாளர்களையும் வைச்சிருக்கலை'' என்றார் கொஞ்சம் காட்டமாக.

''**எ**னக்குக்கூட இரண்டு உதவியாளர்கள் இருக்கிறார்கள். அவர்கள் யாரும் கவிஞர்கள் இல்லை. என்னுடைய நெருங்கிய உறவினர்கள். அவர்களுக்கும் பாட்டுக்கும் சிறிதும் சம்பந்தமில்லை. நீங்கள் சொல்லும் பினாமி பாடலாசிரியர் விவகாரம்

> ''உதவி பாடலாசிரியர்கள், வஞ்சக மனம் கொண்டவர்களிடம் சிக்கி தங்கள் பாடல்களைக்

உண்மையாக இருந்தாலும் இருக்கலாம்! ஆனால், சொந்தத் திறமை மட்டுமே வெற்றி பெறும்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னார் பா.விஜய்.

**ப**ழனிபாரதியிடம் பேசியபோது, ''கண்ணதாசன் காலத்திலேயே இப்படியொரு வதந்தி உண்டு. பஞ்சு அருணாசலம் பாடலை, கண்ணதாசன் திருத்தம் செய்து தம் பெயரைப் போட்டுக் கொண்டதாகச் சொல்வோர் சிலர் உண்டு. இதை நம்ப முடியுமா? கண்ணதாசன், எவ்வளவு பெரிய ஆளுமை! ஆனால், இன்றைய சூழலில் தமிழ் பாடலாசிரியர்கள் உலகம் நல்ல நிலையில் இல்லை. எனக்கு ஒரு வாய்ப்புக் கிடைக்கும் என்றால், அதைத் தட்டிப்பறிக்க வேறொருவர் தயாராக இருக்கிறார். அந்த நிலையை வைத்துப் பார்க்கும்போது, இந்த பினாமி பாடலாசிரியர் விவகாரம் உண்மையாக இருக்கவும் வாய்ப்புள்ளது'' என்றார்.

பாடலாசிரியர் கபிலன், ''பாட்டு எழுதுவது என்பது தனிக்கலை; தனி சிந்தனை. இதில் வேறு ஒருவர் குறுக்கீடு தேவையில்லை; சாத்தியமும் இல்லை என்று நினைக்கிறேன். எனக்கு, பத்தாண்டு

களுக்கு மேல் இலக்கிய அனுபவமும், வாசிப்புப் பயிற்சியும் உள்ளது. தமிழ் இலக்கியம் படித்தவன். எனக்கு உதவி பாடலாசிரியர்கள் தேவையில்லை. அதில் உடன்பாடும் இல்லை'' என்றார்.

மூத்த கவிஞரான கவிஞர் அப்துல் ரகுமானிடம், பினாமி பாடலாசிரியர் விவகாரம் பற்றிக் கேட்டபோது, நீண்ட தயக்கத்துக்குப் பிறகு நம்மிடம் பேசினார்.

''பினாமி பாடல் விவகாரம் எளிதாக நடக்கக்கூடிய ஒன்று. சினிமா, ஒரு வியாபாரம். அதில் இதுபோன்ற சம்பவங்களைத் தவிர்க்கவே முடியாது. அதே நேரத்தில், திறமையான சினிமா கவிஞர்களும் இருக்கவே செய்கிறார்கள்'' என்று தம் தரப்பு சிந்தனையை எடுத்துச் சொன்னார்.

**கொடுத்துவிட்டு, அவர்களுக்கு எடுபிடியாக மாறிவிடும் அவலம் எல்லோருக்கும் தெரிந்ததே!''**

பினாமி பாடலாசிரியர் சர்ச்சை பற்றிப் பேச பாடலாசிரியர் சினேகனைத் தொடர்பு கொண்டோம். நம்மிடம் இந்த விவரத்தை கேட்டுக்கொண்டு, ''இப்போது நான் பிஸியாக இருக்கிறேன். பிறகு தொடர்பு கொள்ளுங்கள்'' என்றார். பிறகு தொடர்ந்து நாம் தொடர்பு கொண்டபோது, அவர் செல்ஃபோன் 'ஸ்விட்ச் ஆஃப்' என்று வந்தது.

இந்த விவகாரம் குறித்து, வளரும் இளம் பாடலாசிரியர் குகை புகழேந்தியிடம் கேட்டோம்.

''பாட்டெழுத வாய்ப்புக் கேட்டு கவிதையோடும் பாடலோடும், கையில் பத்துப் பைசாகூட இல்லாமல் அலைந்து கொண்டிருப்பார்கள். அப்போது பாவம் என்று சிலரை, பாடலாசிரியர்கள் உதவியாளராகச் சேர்த்துக் கொள்வார்கள். அப்போதெல்லாம் அந்தப் பாடலாசிரியரே தெய்வம் என்று நினைத்து குற்றேவல் செய்த இவர்கள், பிறகு அந்தக் குறிப்பிட்ட பாடலாசிரியரை விட்டோ, இந்தத் துறையை விட்டோ வெளியேறிய பிறகு, இப்படியொரு விஷயத்தைப் பரப்பிவிடுகிறார்கள். இதில் உண்மை இல்லாமல் இல்லை. ஆனால், அப்போது இனித்த விஷயம் இப்போது கசக்கிறதா?'' என்று



விவகாரத்தில் இருக்கும் மறுபக்க உண்மையைப் போட்டுடைத்தார்.

இந்த சினிமா உலகில் எல்லா துறையிலும் பரபரப்பும் மோசடியும் குழிப்பறித்தல்களும் சகஜம் என்பதை பாமர ரசிகன் கூட அறிவான். அதேபோலதான் பினாமி பாடலாசிரியர் விவகாரமும். தங்கள் திறமையைக் கொண்டு எழுதிய பாடல், வேறு ஒருவரின் பெயரில் ஊரெங்கும் ஒலித்துக்கொண்டிருக்க, அதைப் பார்த்து உள்ளுக்குள் அழுதுக்கொண்டிருக்கும் முகம் தெரியாத, இளம் பாடலாசிரியர்கள் வெளியுலகத்துக்கு வந்து, இந்த உண்மைகளைப் போட்டுடைத்தால் மட்டுமே இது அம்பலமாகும். அதுவரை இது வெறும் வதந்தி மட்டும்தான்.

**- மாசி**

**க்ஷே**த்திர ஸ்வ ரூபாவுக்கு அடுத்த திருநாமம் **க்ஷேத்ரேஸி** - க்ஷேத்திரேஸி என்றால், க்ஷேத்ரக்ஞரான சிவ காமேசுவரரின் பத்னியாக இருக்கக்கூடியவள். அடுத்து வருவது **க்ஷேத்ர க்ஷேத்ரக் ஞபாலினி.** இதுதான் ரொம்ப முக்கியம். க்ஷேத்திர ஸ்வரூபமாக இருப்பதைவிட, க்ஷேத்திரேஸியாக இருப்பதைவிட, க்ஷேத்திரங்களையும் அந்த க்ஷேத்திரங்களுக்கு வரக்கூடிய பக்தர்களையும் காப்பாற்றக்கூடியவள் - அங்கே இருக்கின்ற தனது குழந்தைகளைக் காப்பாற்றுகிறவள் அம்பிகை.

ஸ்ரீ லலிதா
இரண்டாம் பாகம்

முகூர்த்த நேரத்தில் அம்பாள் எல்லா இடங்களிலேயும் தன்னுடைய அம்சங்களை வெளிப்படுத்திக்கொண்டு, முழுக்க முழுக்க வியாபித்திருக்கிறாள். அதனால்தான் அந்த நேரத்தில் எதைத் தொடங்கினாலும் அது நல்லது. விஜயதசமி என்பது இதுதான். விஜயா என்கிற பெயரே அதனால் ஏற்பட்டதுதான். - அந்த முகூர்த்த நேரத்தில் ஜகத் முழுக்க வியாபித்திருக்கிறாள் என்பதால், விஜயத்தை நமக்குத் தரக்கூடியவள் - வெற்றியைத் தனது ஆதாரமாகக் கொண்டவள்.

# கலி தீர்க்கும் கற்பகக் கொடி!

உமாதேவி என்கிற திருநாமத்துக்கே காப்பாற்றுகிறவள் என்றுதான் அர்த்தம். ஜகத்தையே அவள்தான் ரக்ஷிக்கிறாள் - குறிப்பாக, க்ஷேத்திரங்களுக்கு வரும் பக்தர்களையும் ரக்ஷிக்கிறாள்.

பின்னாலே வரும் திருநாமங்கள் **விஜயா - விமலா, வந்த்யா, வந்தாரு ஜன வத்ஸலா. விஜயா** - வெற்றிக்கு இருப்பிடமாக இருக்கக்கூடியவள். அது மட்டுமல்ல; ஒரு குறிப்பிட்ட முகூர்த்தத்துக்கு விஜயா என்று பெயர். அந்த முகூர்த்தத்தில், அம்பாள் முழுக்க முழுக்க ஜகத்தின் எல்லா இடங்களிலேயும் வியாபித்திருக்கிறாள். புரட்டாசி மாதம், சுக்ல பக்ஷத்து தசமி அன்று மாலை, நட்சத்திரங்கள் உதயமாகக்கூடிய நேரம் இருக்கிறதே, அந்த

சுதா சேஷய்யன்

25

**அண்டி வந்தோருக்கு அபயம்!**

**விமலா** களங்கமே இல்லாதவள்.

**வந்த்யா** நம்முடைய வந்தனங்களுக்கும் ஆராதனைகளுக்கும் தாத்பர்யமாக இருக்கக்கூடியவள்.

**வந்தாரு ஜன வத்ஸலா** - வரக்கூடிய பக்தர்களுக்கு வத்ஸலாவாக வாத்ஸல்யத்தைத் தரக்கூடியவள். எந்த பக்தர்கள் வந்தாலும் அவர்களுக்கு வாத்ஸல்யத்தைத் தரக்கூடியவள் அம்பாள். இந்தத் திருநாமத்துடன் இணைகிற மாதிரி, இதற்கு ஒரு நான்கு திருநாமங்கள் கழித்து இன்னொரு திருநாமம் வரும் :

**வாக்வாதினி, வாமகேசி, வஹ்னி மண்டல வாஸினி,** - இவற்றுக்கெல்லாம் பிறகு **பசு பாச விமோசினி** என்ற திருநாமத்துக்கு முந்தைய திருநாமம் **பக்தி மத்**

கல்பலதிகா. இதுவும் **வந்தாரு ஜன வத்ஸலா** என்கிற திருநாமத்துடன் சேர்த்து சிந்திக்கக்கூடிய திருநாமம். அதைப் பார்ப்பதற்கு முன் வாக்வாதினி முதலான நாமங்களைப் பார்ப்போம்.

**வாக்வாதினி** - வாக் ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள்.

**வாமகேசி** - அழகான கூந்தலை உடையவள்.

**வஹ்னிமண்டலவாஸினி** ஜ்வாலையான அக்னி மண்டலத்தின் மத்தியில் உறைபவள்.

### தர்மத்துக்கு ஆதாரம்

**ச ம் ஹ் ரு தா சே ஷ பா ஷ ண் டா** - பாஷண்டம் என்றால் வேதத்துக்குப் புறம்பான, வேதத்தை ஏற்றுக்கொள்ளாத விஷயங்கள், வேதத்தை ஏற்காத கலைகள், அல்லது விஞ்ஞானம் வேதத்துக்கு விரோதமானது எதுவாயினும் அதற்கு பாஷண்டம் என்று பெயர். அவ்வாறு பாஷண்டமாக இருக்கக்கூடியவற்றை அவள் என்ன செய்கிறாள், அடியோடு நாசம் செய்துவிடுகிறாள்; சம்ஹரித்து விடுகிறாள். **சம்ஹ்ருதாசேஷ பாஷண்டா** என்பதற்கு இதுதான் அர்த்தம். தர்மத்துக்கு விரோதமானவை, வேதத்துக்கு விரோதமானவை - அவள் அருளால் நசிந்து போகும். அதனால்தான் அடுத்து வரக்கூடிய திருநாமம் **சதாசாரப்ரவர்த்திகா** என்பதாக இருக்கிறது. நல்ல ஆசாரங்கள்; சுத்தமான கோட்பாடுகள், உயர்ந்த தர்மங்கள் - இவையெல்லாமே அவசியம் தேவையானவை. இவற்றை விருத்தி செய்யக்கூடியவள், வளர்க்கக் கூடியவள் அம்பிகை பரமேசுவரி.

தர்மத்துக்கு எதிரானவற்றை சம்ஹரிப்பவளும் அவள்தான்; தர்மத்துக்கு ஆதாரமானவற்றை வளர்ப்பவளும் அவளே.

இதற்கு முன்னால் ஒரு திருநாமம் உண்டு. **பசு பாச விமோசினி** என்று. பசுக்களாக இருக்கக்கூடிய ஜீவாத்மாக்களின் பாசங்கள் - நமது உலகத் தளைகளை நீக்கி, விமோசனம் அளிக்கிறாள். ஜீவன்கள் பாசத்தால் கட்டப்பட்டிருக்கின்றன. பாசம் என்றாலே கயிறு-கட்டுதல். அதைப் போக்கி அல்லது நீக்கி விமோசனம் தரக்கூடியவள் பசு-பாச விமோசினி.

இதற்கும் முன்னால் வரக்கூடிய திருநாமம் **பக்திமத் கல்பலதிகா**. பக்தர்கள் எதைக் கேட்டாலும் தரக்கூடியவள். எதைக் கேட்டாலும் என்றால்...? அது எவ்வாறு சாத்தியம்? அம்பாளுடைய கருணையினால் அது சாத்தியமாகிறது. ஏற்கெனவே நாம் பார்த்தோம். பவாநித்வத்தைக் கேட்டாலும் தரக்கூடியவள் அவள் என்பதை. அதை நாம் கேட்காவிட்டால்கூட, கேட்டதாக நினைத்துக்கொண்டு தரக்கூடியவள். ஆகவேதான் பக்திமத் கல்பலதிகா - பக்தர்கள் எதைக்கேட்டாலும் தரவல்ல கற்பகத் தரு.

### கற்பகத் தருவின் வஞ்சனை!

இதை வைத்துக்கொண்டு ஆசார்யர்

**அம்மா! நீதான் எங்களுக்குக் கற்பக உன் திருவடிகளுக்குத் தெரியும். பக்தர்களான எங்களுக்கு என்ன**

ஆதி சங்கரர், ஓர் அழகான விஷயத்தைச் சொல்கிறார் :

கற்பக விருக்ஷம் தேவலோகத்தில் இருக்கிறது. அதன் தன்மை என்னவென்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால், அதை யாராவது பார்த்திருக்கிறோமா என்றால், இல்லை! ஆனால், அதன் தன்மை என்ன என்பது மட்டும் தெரியும். கற்பக விருக்ஷம், நாம் கேட்டதையெல்லாம் கொடுக்கும் என்பது தெரியும். அதனால் தான் பிள்ளையார்பட்டி விநாயகருக்கு கற்பக விநாயகர் என்றே பெயர் - கேட்டதையெல்லாம் தரக்கூடியவர் அவர், என்பதால்.

கற்பக விருக்ஷம் எதைக் கேட்டாலும் தருமா என்ன? ஆசார்யருக்கு ஒரு சந்தேகம் வந்தது. ''கற்பக விருக்ஷம் ரொம்ப மோசம்!'' என்றார். ''கேட்டதையெல்லாம் அது கொடுக்கிறது, சரி... ஆனால், யாருக்குக் கொடுக்க வேண்டும்? யாருக்கு இல்லையோ அவர்களுக்குத்தானே கொடுக்க வேண்டும்! ஆனால், இந்தக் கற்பக விருக்ஷம் தேவலோகத்திலே போய் உட்கார்ந்து கொண்டு, அங்கேயுள்ள தேவர்களுக்கெல்லாம்? வாரிக் கொடுக்கிறது. தேவலோகத்து தேவர்களுக்குத்தான் எல்லாம் இருக்கிறதே! ஏற்கெனவே அவர்கள் அமிர்த பானம் செய்தவர்கள். நிறைந்த ஆயுள் இருக்கிறது; செல்வம் இருக்கிறது; உயர் பிறப்பு அவர்களுடையது. நாம் சாதாரணமாகப் பேசுகிறபோதுகூட, 'என்ன தேவலோகத்திலிருந்து வந்து குதித்ததாக நினைவோ?' என்று கேட்கிறோம். அப்படியானால், எல்லாமே இருக்கக்கூடிய வானுலகத்தில் போய் கற்பக விருக்ஷம் உட்கார்ந்து கொண்டு, இருக்கக்கூடியவர்களுக்கே திரும்பத் திரும்பக் கொடுத்துக்கொண்டிருக்கிறதே!'' என்றார் ஆசார்யர். ''பூவுலகில் கஷ்டப்படுகிறவர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்கிற எண்ணம், அந்தக் கற்பக விருக்ஷத்துக்கு இல்லை! ஆனால், அம்மா! நீதான் எங்களுக்குக் கற்பக விருக்ஷமாக இருக்கிறாய். உன் திருவடிகளுக்குத் தெரியும். அதனை வந்தடைந்த பக்தர்களான எங்களுக்கு என்ன கொடுக்கவேண்டும் என்பது நன்றாகத் தெரியும். எனவே உன் திருவடிகள் கற்பக விருக்ஷம் என்று சொல்வதுகூட சரியல்ல; கற்பக விருக்ஷத்துக்கும் மேலானவை உன் திருவடிகள்...'' என்றார் ஆசார்யர்.

ஆசார்யருடைய சௌந்தர்ய லஹரி, கிட்டத்தட்ட ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்திலிருந்து ஆதாரத்தைப் பெற்று, அதிலிருந்து விரிவாக்கப்பட்டதுதான். ஆசார்யரின் சௌந்தர்ய லஹரியிலிருந்து வந்த ஆதாரம்தான், அபிராமி பட்டரிடத்தில் அபிராமி அந்தாதியாகவும் பாரதியாரிடத்தில் சக்தி பாடல்களாகவும் பெருக்கெடுத்து ஓடின. பெரிய பிரவாகத்தில்தான் இவையெல்லாம் பிறந்தன. அந்த அருள் பிரவாகம், அம்பிகையின் அருள் பிரகாசம். பக்தர்களுக்கு வந்தாருஜனவத்ஸலாவாக இருக்கக்கூடிய அம்பிகையின் அருள், ஒன்றுமே இல்லாமல் வரக்கூடிய பக்தர்களுக்குக்கூட எல்லாவற்றையும் தரவல்லது.



**விருக்ஷமாக இருக்கிறாய்.**
**அதனை வந்தடைந்த**
**கொடுக்கவேண்டும் என்று.**

அம்பாளின் இந்த குணத்தைக் குறிக்க இன்னொன்றும் சொன்னார் ஆசார்யர்...

**(வளரும்)**

# வாழ்க்கை வைக்கும்

● ஏ.கே.நாசர், திருப்பட்டினம்

**கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போவதைத் தடுப்பதற்கு என்ன செய்யலாம்...?**

கூச்சப்படாமல் மனைவி அல்லது அம்மாவை ஊட்டிவிடச் சொல்லுங்கள். இல்லை, வாய்க்கு எட்ட வேண்டியதை, 'லிக்விட் டயட்'டாக டம்ளரில் விட்டு, ஸ்ட்ராவால் உறிஞ்சிவிடுங்கள். வாய்க்கு எட்டாமல் கை தடுப்பதுதான் வாழ்க்கை.

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

**வரதட்சணை - லஞ்சம்... என்ன வேறுபாடு?**

பெண் வீட்டார் கொடுக்கும்போது இதன் பெயர் வரதட்சணை. Brideக்காகத் தரப்படும் இதை, பிள்ளை வீட்டார் வாங்கும்போது Bribe ஆகிறது.

● லாவண்யா, சேலம்

**வாழ்க்கை ஒரு பள்ளிக்கூடமா...?**

சின்ன வித்தியாசம். பள்ளிக்கூடத்தில் பாடம் நடத்திய பின், பரீட்சை வைக்கிறார்கள். வாழ்க்கை, பரீட்சை வைத்து பின் பாடம் கற்றுத் தருகிறது. பள்ளிக்கூடத்தில் பாலாகப் படிக்க வேண்டும். வாழ்க்கையில் பாலாக, படிய வேண்டும்.

● கா.சங்கர், சாலை அகரம்

**வாழ்க்கையில் யாருக்காவது கை கொடுத்துத் தூக்கிவிட்டதுண்டா..?**

அமெரிக்காவுக்கு நாடகம் போடச் சென்றபோது, அரிசோனா என்ற இடத்தில் உள்ள பாறைகள் நிரம்பிய பள்ளத்தாக்கைப் பார்க்க, க்ரேஸி க்ரியேஷன்ஸ் நண்பர்களோடு சென்றேன். பாத்ரூமில் குளிக்கும்போதே, மூழ்கிப் போகும் அளவுக்குத் தண்ணீர் கண்டம் கொண்ட என் நண்பன் வாசு, பாறை வழுக்கி அங்கு ஓடிக்கொண்டிருந்த ஆற்றில் விழுந்து, குய்யோ முறையோ என்று அலறியபடி அடித்துச் செல்லப்பட்டான். பதறிப்போன நான், ஆற்றின் கரையோரமாக ஓடிச்சென்று, வாசுவுக்குக் கை கொடுத்துத் தூக்கிவிட்டு, அவனைக் கரை சேர்த்தேன். அப்போது இதையெல்லாம் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த அமெரிக்கர்கள் கேலியாக என்னைப் பார்த்தார்கள். 'ஒய் ஸார் லாஃபிங்' என்ற பாவத்தில் நான் தமிழில் பார்க்க, அவர்கள், 'ஆற்றில் விழுந்த வாசு அடி முட்டாள்



# பரீட்சை!

என்றால், அவனுக்குக் கை கொடுத்த நீ முழங்கால் முட்டாள்' என்று சஸ்பென்ஸ் வைத்து ஆங்கிலத்தில் என்னைப் பார்த்தார்கள். பிறகு சஸ்பென்ஸை உடைப்பது போல, அந்த ஆற்றில் இறங்கி, முழங்கால் அளவே ஓடிக்கொண்டிருந்த தண்ணீரில் விழுந்து விழுந்து சிரித்தார்கள். அந்த முழங்கால் முழுக்கு ஆற்றில், அமெரிக்க வாண்டு விட்ட காகிதக் கப்பலில் வாகுவால், என் அவமானம் கப்பலேறிப் போச்சு...

● **ஆர்.ஆர்.தமன், சென்னை**

*முன்னே பின்னே செத்திருந்தால் தானே சுடுகாடு தெரியும் எனும் பழமொழி simply crazy தானே...?*

சுடுகாட்டு வாசலில் ஒட்டுக் கேட்டு சுட்ட சம்பாஷணை...

**உடல்:** ''இப்படியெல்லாம் கேள்வி கேட்டு, ஏற்கெனவே செத்த என்னை ஏன்யா மறுபடி சாவடிக்கறீங்க! செத்ததுக்கு அப்பால, நான் போறது சுடுகாடா, இல்லை, ஏற்காடானு எனக்கு எப்படிப்பா தெரியும்? ஏம்பா.... உனக்காச்சும் பதில் தெரியுமா...?''

**உயிர்:** ''பொணமா லட்சணமா கம்னு கெடக்கறத வுட்டுட்டு, போற நேரத்துல அபசகுனமா கேள்வி கேட்டு ஏன் என் உசிரை வாங்குற.... தோ பார்... நீ மண்ணுலேர்ந்து வந்த... மண்ணுக்குப் போற...நான் விண்ணுலேர்ந்து வந்தேன்... விண்ணுக்குப் போறேன்... அங்க விண்ணுல சுடுகாடு, சுடாத காடுனு ஒரு மண்ணும் கிடையாது!''

**ஆன்மா:** ''என்ன எழவுடா இது! அங்க




புள்ளை அப்பனுக்குக் கொள்ளி வக்கு காரியம் பண்ண ரெடியா, மடியா காத்துக்கிட்டுருக்கான். நீங்க ரெண்டு பேரும் இப்படி அடிச்சுக்கறீங்களே! நல்லா கேட்டுக்குங்க. யாரும் சாவறது கிடையாது... கொஞ்ச நாள் சேர்ந்து இருந்தீங்க. இப்ப பிரியப் போறீங்க.

பிரிவோம் சந்திப்போம் அம்புடுதேன். ஓ.கே.வா?''

**உடல், உயிர் (கோரஸாக):** ''நீ சொன்னா கரெக்டாத்தான் இருக்கும் அண்ணாத்தே.''

## கிரேஸியைக் கேளுங்கள்

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.